*Kumara<u>n</u>*

*Āram 10, muttu 43*

*June 15, 1933*

Record no. 313

REG. NO. M. 1823. 16-பக்கங்கள் KUMARAN WEEKLY.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

கோர்ட் விளம்பரத்த
க்கு இஞ்ச ஒன்றுக்கு
ரூ. 1-0-0
வியாபார சம்பந்த
மானது ரூ. 0-8-0
ஒப்பந்த விளம்பரத்
துக்கு மானேஜருக்
கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY

ஆரம் 10. காரைக்குடி, ஸ்ரீ முக-ஹூ ஆனி-மீ உ-உ (15—6—33.) முத்து 43.

## உலகம் தலைகீழ்.

பர்னகுடி ஒரு புண்ணிய ஸ்தலமாக எதிர்காலத்தில் கொண்டாடப்படக்கூடிய இடமாகியிருக்கிறது. எரவாடா சிறை, சாரூன் வைத்தியசாலை சபர்மதி ஆசிரமம் பர்னக்குடிக்குன்று இவை வருங்காலத்தில் தீர்த்த பாத்திரை ஸ்தலங்களாகி விளங்கப் போகின்றன. காசி, கயா, மக்கா மதினு போன்று அந்த ஸ்தலங்களுக்கும் மதிப்பு ஏற்படப்போகிறது. பர்னக்குடியில் மகாத்மா காந்தி பட்டினி விரதங் காத்த பெருமையோடு கல்யாணப் பெருமையும் ஏற்படப்போவது விசேஷ சம்பவமாகும். காந்தியடிகளின் புதல்வர் நால்வருக்குள் நயமான பிள்ளை தேவதாஸ் காந்தி யென்பது பலருடைய கருத்து. அந்த நல்ல பிள்ளைக்கு ஜூன் 16ந்தேதி பர்னக்குடியில் கல்யாணம் நடக்கப்போகிறது.

0 0 0

உலகப் பெரியார் மகனுக்குக் கல்யாணமென்றால் அதில் பல ரசங்கள் பொருந்தியிருக்க வேண்டுமல்லவா? இருக்கிறது. மகாத்மா காந்தியடிகளின் மகனார் செய்துகொள்ளப் போவது கலப்பு மணம்; வர்ணாசிரமம் சான்குஜாதி கலியாமல் இருக்கவேண்டுமென்று மகாத்மா கூறுகிறார். அவர் பிள்ளை கலப்பு மணத்தில் முனைந்திருக்கிறார். கலப்பு மணம் செய்வதால் பிறக்கும் பிள்ளைகட்கு 'சங்கரஜாதி' என்று மனுதர்மசாஸ்திரத்தில் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திருமணத்தில் வேடிக்கை அதிகம். கலப்பு மணத்தில் உயர்ந்த ஜாதி ஆணுக்குத் தாழ்ந்தஜாதிப் பெண்ணை ஆபத் காலத்தில் கல்யாணம் செய்யலாமென்று விலக்குவிதியிருக்கிறது. ஆனால் தாழ்ந்த ஜாதி ஆணுக்கு உயர்ந்தஜாதிப்பெண்ணைக்கட்டவிதியில்லை. தேவதாஸ் காந்தி வைசிய ஜாதிக்காரர். பெண்ணோ உயர்ந்த பிராமண குலத்தில் உற்பவித்திருக்கிறது. முதல் ஜாதிப் பெண்ணுக்கும் மூன்றாஞ் சாதி மாப்பிள்ளைக்கும் பர்னக்குடியில் கல்யாணம். சாஸ்திரம் இருக்கிறதா போய்விட்டதா?

0 0 0

ஹிந்துக்களுக்காக வெள்ளைக்காரர் இந்தியாவில் செய்து வைத்திருக்கிற சட்டம் இந்தமாதிரி காரியங்கட்கு இடங்கொடாது. பழைய மனிதரும சாஸ்திரமுமே ஹிந்துக்களின் உரிமைக்கு உத்திரவாதமாக இருப்பதால் அதை யொட்டியே வெள்ளைக்காரர் ஹிந்துக்கட்கு சட்டம் செய்து கொடுக்க வேண்டியவர்களானார்கள். ஆதலால் வேறு ஜாதியில் செய்யும் கலப்புக் கல்யாணங்களால் பிறக்கும் குழந்தைகள் சோரப்பிள்ளைகளாகவும், கல்யாணத்தின் மதிப்பு வைப்பாட்டி சங்கதியாகவுந்தான் முடிகிறது. இந்த அசிங்கமான நிலைமை நமது தேவதாஸ் விவாகத்துக்கு ஏற்படக் கூடாதென்பதற்காகவே சிவில் கல்யாணச் சட்டத்தின்கீழ் ரெஜிஸ்டர்செய்யப்படப்போகிறார்கள். ரெஜிஸ்டர் செய்துவிட்டால் அது கிருதுவஸ்வர்களுடைய கல்யாண பத்ததியில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சட்டப்படி சொத்துப் பாத்தியம் பிள்ளை பாத்தியம பிடியாதபோது ஒருவரை விட்டு ஒருவர் விலகிக்கொள்ளும் பாத்தியம் கல்யாணத்தை ரத்து செய்யாமல் வேறு கல்யாணம்செய்து கொள்ள முடியாத கட்டுப்பாடு முதலிய உரிமைகள் ஏற்பட்டுவிடுகின்றன. இந்த ரிஜிஸ்டர் கல்யாணம் ஹிந்து ஆசாரத்துக்கு முற்றும் மாறுபாடு.

0 0 0

ரிஜிஸ்டர் கல்யாணம் நமது தேவதாஸுக்கும் லட்சுமி அம்மாளுக்கும் ஜூன் 20௳ ரிஜிஸ்டரார் முன்னிலையில் புனாவில் நடைபெறும். இதுமட்டும் போதுமா? ஹிந்து மத ஆசாரப்படி ஜூன் 16௳ பர்னகுடியில் இந்த இருவருக்குமே ஹிந்துமத ஆசாரப்படி ஒரு கல்யாணம் நடக்குமென்று அ. பிரஸ் செய்தியொன்று புறப்பட்டிருக்கிறது. ஹிந்துமதமென்பது பழய ஹிந்துமதமா புதியஹிந்துமதமா என்பது சந்தேகத்துக்கிடமாகியிருக்கிறது. ஹிந்துமதத்தின் ஜீவநாடி நான்கு ஜாதியைக் காப்பாற்றல். ஒரு ஜாதிக்காரர் மற்ற ஜாதியில் கல்யாணம் செய்வது ஹிந்து மதத்தின் அழிவுக்கு முதற்படியாகும். ஆபத் காலத்தில் தன் ஜாதியில் பெண்கிடைக்காவிட்டால் தன் ஜாதிக்குத்தாழ்ந்த ஜாதியில் பெண் கொள்ளலாம். அதுவும் ஜாதி சங்கரத்தையே தரும் என்று மனுவில் கூறப்படுகிறது. எப்படி ஆபத்து வந்தாலும் தனக்கு உயர்ந்த ஜாதிப் பெண்களைக் கட்டிக் கொள்ளுதல் கூடவே கூடாது. அதிலும் பிராமணப் பெண்ணைத் தாழ்ந்த ஜாதியார் கொள்ளுதல் நினைக்கமுடியாத பாதகச்செயலாகு மென்பது ஹிந்து சாஸ்திரிகள் முடிவு கட்டிய விஷயமாகும்.

0 0 0

ஒரு பிராமணப் பெண்ணை—அதிலும் ஆசாரமே பற்றிப்படர்ந்து மற்றெல்லாவற்றையும் மூடி மறைத்துக் கிடக்கும் தமிழ்நாட்டு பிராமணப் பெண்ணை அதிலும் ஐயங்கார்குடும்பப் பெண்ணை-அதிலும் ஆசாரஞ் சிறந்த வடகலை ஐயங்காருடைய பெண்ணை-ஒரு குஜராத்திச் செட்டி கல்யாணம் செய்வதென்றால் ஆச்சரிய மில்லையா? அப்படிக் கல்யாணம் செய்யத் துணிந்தது மல்லாமல் இதுதான் ஹிந்து ஆசாரம் என்று கூறி இந்து மத ஆசாரப்படி கல்யாணம் செய்ய முனைவந்திருப்பது தைரியமா அநியாயமா என்பதை நம்நாட்டு வைதீகர்களே முடிவு செய்ய வேண்டும். இந்தக் கலப்பு மணத்தில் ஜாதிக் கலப்பு மட்டுமல்ல. பாஷைக் கலப்பு முண்டு. மாப்பிள்ளையின் பாஷை குஜராத்தி; பெண்ணின் பாஷை தமிழ்.

கலப்பு மணத்தில் ராஜகோபாலாச்சாரியாருக்கு சம்மதமில்லை. கலப்பு மணம் தம்பதிகட்கு சுகவாழ்வைத் தரமாட்டாதென்று அவர் அபிப்பிராயம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறாராம். ஆனால் உலகம் தலைகீழாகிவருகிறதல்லவா? பெண் புறப்பட்டு குஜராத்தி மாப்பிள்ளையை அடைகிறது. கலப்பு மணத்தில் விருப்பமில்லாத ஆசாரியாருக்கு ஆயிரம் மைலுக்கு அப்பாலுள்ள தேசத்திற் பிறந்தவரைக் கல்யாணம் செய்து கொள்கிற பெண் குழந்தை பிறந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை. இரணியன் வயிற்றில் பிரகலாதன் பிறந்ததாகவல்லவா புராணம்தெரிவிக்கவில்லையா? பிள்ளைக்குப் புத்திவந்துவிட்டால் பெற்றோரால் தடுக்க முடிகிறதா? சீர்திருத்த தெய்வத்தின் திருவருள்பெற்ற லட்சுமி அம்மாளை ராஜகோபாலாச்சாரியாரால் தடுக்கமுடியுமா? நடக்கிறது கல்யாணம்!

0 0 0

ஒருவகையில் சந்தோஷப்படலாம். உலகப் பெரியாருடைய பிள்ளைக்கு தமிழ் நாட்டார் பெண் கொடுத்து மாப்பிள்ளையாக்கிக் கொள்வது பெருமையல்லவா? படிப்பிலோ அறிவிலோ அழகிலோ சிறந்த பெண்கள் இந்திய நாட்டிலும் பிறநாட்டிலும் இருந்தாலும் நம்முடைய தமிழ்நாட்டுக்குத்தானே மாப்பிள்ளையாக தேவதாஸ்வருகிறார். பலே! தமிழ்நாடு அதிர்ஷ்டமுள்ளநாடுதான்; சந்தேகமில்லை. உலகத்திலேயுள்ள இருநூறு கோடி மக்களில் காந்திக்கு சம்பந்தியாகும் பெருமை நமது ஆசாரியாருக்குக் கிடைத்தது நினைக்க நினைக்க சந்தோஷப்படக் கூடியதல்லவா? கலப்புமணத்தைவெறுக்கிற வைதிகரும் இதில்சந்தோஷப்பட இடமிருக்கிறது. ஜாதி கலந்தாலும் பாஷை கலந்தாலும் மதத்தில் கலப்பில்லை. மாப்பிள்ளை வீட்டுக்காரரும் பெண்வீட்டுக்காரரும் ராமக்காரர் தானென்பதை நினைத்துத் தென்னாட்டு ஐயங்கார்கள் சிறிது ஆறுதலடையலாம். என்றாலும் ஐயங்கார் ஜாதியில் மாப்பிள்ளையை யாவது அவருக்குப் பிறக்கும் பிள்ளையையாவது சேர்த்துக் கொள்வார்களோ? எதுவோ ஆனால் ஒன்றுமட்டும் நிச்சயம். தேவதாஸ்—லெட்சுமிக்குக் குழந்தை பிறந்து கல்யாணம் செய்கிற காலத்தில "முன்னொருகாலத்தில் தென்னிந்தியாவில் வடகலை ஐயங்கார் ஜாதி யொன்றிருந்தது" என்று சரித்திரம் எழுதும்படி நேர்ந்தாலும் நேரலாம். யார்கண்டார்? கலப்புமணத்தின் திருவருள் எதையும் செய்யும். அதனால் கலப்பு மணத்துக்குத் துணிந்த தம்பதிகள் நீடூழிவாழ்க! கலப்புப்பிள்ளைகளைப்பெற்றுக் கலப்புமணம்செய்துசிறப்புறுக.

## பொறுக்கு மணிகள்

சர்ரேயில் நடைபெற்ற கோழிப் போட்டியில் இரண்டு கோழிகள் தலா 28 முட்டைகள் விகிதமிட்டன. மற்ளுெரு கோழி 27 பெரிய முட்டைகளைப் போட்டது.

0 0 0

ஜப்பல் பூரில் அழகுப் போட்டிப் பந்தயம் ஒன்று நடைபெற்றது. அதில் மிஸ் பீ. ஜெர்கினே என்னும் பெண் 1933-ம் ஆட்டைய அழகு இராணியாகத்தேர்ந்தெடுக்கப்பட்டாள்.

0 0 0

இஸ் மிதுக்கருகில் துருக்கி ஸர்க்கார் 5,00,000 பவுன் செலவில் நவீனத்துறைமுக மொன்றையும் புதிய கப்பற் படைமருந்து கிடங்கொன்றையும் கட்டுவதற்கு ஆரம்பித்திருக்கிறார்களாம்.

0 0 0

தற்போது அமெரிக்காவில் 50வருடங்களுக்கு உலகிற்குப் போதுமான வெள்ளி குவிந்து கிடக்கிறதென்று மிஸ்டர் ராபர்ட் கிராண்டு கூறுகிறாரும்.

0 0 0

டெக்ஸாஸில் நடைபெற்ற ஒரு ஆடைப் போட்டியில் மிஸ். ஜாய்ஸ் கிரேஸ் என்ற பெண் தனிப் பழங்களாலும் காய்கறிகளாலுமான ஓர் அடையை செய்து தரித்து வெற்றி பெற்றாள்.

0 0 0

ஜி. எல். ப்ரௌன் என்ற நீக்ரோ பாதிரி வாஷிங்டனில் 12 மணி 10 நிமிஷ நேரம் தொடர்ந்து மதப்பிரசங்கம் செய்தாராம். இதுவே உலகில் நீண்ட மதப்பிரசங்க மென்று சொல்லப்படுகிறது.

0 0 0

பெபல்லோ நகரிலுள்ள ஜெம்ஸ் ஷிலாகி என்ற அம்பட்டன் மிகவும் செல்வாக்குடையவன். அவனிடம் கிராப் செய்து கொள்கிற வர்கட்கும் முக க்ஷவரம் செய்து கொள்கிறவர் கட்கும் ஒரு டம்பளர் பீர் கொடுக்கிறான்.

0 0 0

டெவன்போர்ட் என்ற விடத்திலுள்ள மிஸ் மாடலேன் என்னும் பெண் தற்கொலை செய்ய விரும்பியபோது தன்னால் அருமையாக வளர்க்கப் பட்டுவந்த பூனைக்குட்டிக்கும் குளோரேபாரம் கொடுத்துக் கொன்றுவிட்டதாகக் கண்டுபிடிக்கப்பட்டது.

0 0 0

ஹாலிவுட் சினிமாக் காட்சிகளில் முப்பத்து நான்குவிதமான முத்தங்களிருப்பதாகக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. அங்குள்ள நிபுணர்கள் நீண்டநேர முத்தங்களை விரும்புவதில்லை. உயர்ந்த முறையிலும் சீக்கிரத்தில் முடிகின்றதுமான முத்தங்களையே விரும்புகின்றார்கள்.

0 0 0

மின்சார விளக்குகளால் செயற்கை சூரிய வெளிச்ச முண்டு பண்ணி அதன் செடிகளின் மீது விழச்செய்வதால், அச்செடிகள் தூங்கும் வேளை குறைவுபட்டு, பருவகாலத்துக்கு முந்தியே காய்க்கத் தொடங்கி விடுகின்றனவென்று இந்தியானு சர்வகலா சாலையார் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

0 0 0

டெக்ஸாஸ் என்ற ஊரிலுள்ள டாலப் பிளாக் பேர்ன் என்பவன் தான் காதலித்த ஒரு பெண்ணினிடம் தன்னால் ஒன்பது மைல் தூரம் கால் முட்டுகளாலும் கையினுலும் நடந்து செல்ல முடியுமென்று கூறி, அவ்வண்ணமே நடந்து காண்பித்தான். எனினும் அப்பெண் அவனை மணம் புரியவில்லை.

# பலகாரம் செய்யும்முறை

(தென்னுலிராமன்.)

(போகர் யாடிய வைத்திய நூலைப்பார்த்து அம்முறையில் மிஸ்டர் தென்னுலிராமன் எழுதியிருப்பதாவது:—)

### காப்புச் செய்யுள்.

சீரான பலகார வகைகள் பல்ல
சிறந்தமுறை செய்யும்வழி சிலசொல் வேன்கேள்
நேரான தண்ணீரை செவிக்குள் பாய்ச்சி
நிம்மதியாய்க் கழுவிப்பின் நினைவாய்க் கேளு
பாரான இந்துமதந் தழுவும் சில்லோர்
மயக்குடனே பாரபரனென் றேத்திப் போற்றும்
காரானை மாமுகனும் குழாய்போல் முக்கன
கண்ணியமா யுனக்குகந்த துணையாம் காணே.

### II.

### சினையிட்லி செய்முறை

வட்டென்ற சினையிட்லி செய்யும் பாகம்
வகையுடனே முதலாகச் செல்வேன் கேளு
பொட்டென்ற மையைப்போ லரைத்த யாவை
புளித்திடவே யிளகுடனே யுப்புங் கூட்டி
தட்டொன்றுங் கொப்பரையில் உருட்டிப் போட்டு
தயவுடனே பருப்புவெல்லம் துளைத்து ஏற்றி
வெட்டென்ற தீயில் வேகக் கணவர்க்கீந்தால்
விழுந்திடுமோல் பலவடிகள் தலையில் பாரே.

### III.

### கதம்பம் செய்முறை

பின்னுமொருபலகாரம் கதம்பம் என்போம்
பிரதானம் அதுவும்நீ அறிந்திருப்பாய்
மன்னுமொரு தோசை,வடை, இட்லி, சுண்டல்
மற்றுமுள பொருள்களெலா மூசிப்போனல்
தன்னுடைய உரலுக்குள் அரைத் துருட்டி
தயங்காமல் காய்ந்த எண்ணெய் தன்னிவிட்டு
பொன்னைப்போல் வெந்தபின்பு கணவர் கொள்ள
புன்னகையில் ஒதுங்கிநின்று முகத்தைப் பாரே.

### IV

### வரட்டுத்தோசை செய்முறை

இதமான மற்றென்று வரட்டுத் தோசை
இதையுண்ண நீர்வேண்டும் மறந்திடாதே.
விதமான உழுந்துமுக்கு, துருணை, உப்பு
வீணை. தவிட்டோடு அரைத்துச் சேர்த்து
சதமான தோசைக்கல் சுடவே பின்னர்
தயங்காமல் பொடியுடனே கணவர்க்கீந்தால்
பதமான தொண்டைக்குள் செல்லுந் தோறும்
பதருது பக்கத்தில் விழித்து நில்லே.

### V

### பெங்களூர் பாகு

ஈறுகச் சொல்லு மொன்று பங்களூர்ப் பாகு
இதமான மைசூர்பாக் போன்ற தன்று
கூறுகக் கத்தியினுல் வெட்டிவிழ்த்துக்
கொட்டைப்பாக் கொருபடியை சீனி சேர்த்து
மாருத சாயமுள தேங்காய்ப் பூவில்
மயக்குடனே விரவிப்பங் ளூர்ப்பா கென்றால்
ஆறுக மாணவர்கள் செட்டிநாட்டில்
அரையணுவுக் கொருகுத்து வாங்கு வாரே.

கபம். கபம். கபம்.



## விகடத் துணுக்குகள்.

தந்தை அடித்துவிட்டதற்காக அழுதுகொண்டிருந்த ஒரு சிறுவனைத் தேற்றும்பொருட்டு தாய்:—சங்கரா அதோவாயிலில்நிற்கிறானே சிறுவன், அவன்பாவம்; தாயுமில்லை; தந்தையுமில்லை, அவனுக்கு ஏதாவது கொடுக்கலாமா அம்மா!

சங்கரன்:—அப்பாவைக்கொடுத்துவிடலாம்.

0 0 0

கோபால்:—கோவிந்தா! ஏன் அழுகிறாய்?

கோவிந்தன்:—மூக்குக் கண்ணுடியை எங்கேயோபோட்டுவிட்டேன்.

கோபால்:—அதற்கு ஏன் அழுகிறாய்? தேடிப்பார்த்தாலென்ன?

கோவிந்தன்:—கண்ணுடிபோட்டுக் கொண்டல்லலது தேடி அது இருக்குமிடத்தைக் கண்டுகொள்ள முடியாது.

0 0 0

இரண்டாம் விலைக்கு மோட்டார் வாங்க வந்த ஒருவரும், மோட்டாரின் சொந்தக்காரரும காரில் கொஞ்சத்தூரம் போய்விட்டுத் திருமபிவந்தார்கள். பிறகு மோட்டார் வாங்கவந்தவர்:—

என்ன ஐயா! உங்கள் மோட்டார் லொடலொட வென்று சத்தம்போடுகிறதே. எப்போதும் இப்படித்தானிருக்குமோ?

மோ. சொந்தக்காரர்—இல்லை; ஓடும்போதுமட்டிலுந்தான் சத்தம்போடும்.

அவருடைய புதல்வன்:—இல்லையப்பா இன்றுமாத்திரம் நாம நம் எஜமானரைவிட்டு வேறொருவர் வீட்டுக்குப்போகவேண்டியிருக்கிறதே யென்று வருத்தங்கொண்டு சத்தம்போடுகிறது.

மோ. வாங்க வந்தவர்:—அவ்வளவு விருப்ப மில்லாத மோட்டாரானல் அது உங்கள் வீட்டிலேயே இருக்கட்டும்.

0 0 0

ஒரு சுவர் இடிந்து விழுந்து விட்டது. அதனை சில வேலைக்காரர்கள் அவசர அவசரமாக மாற்றிக்கொண்டிருந்தார்கள். அப்போது சுவரின் சொந்தக்காரன் தோன்றி:—சுவரிடிந்துபோய்விட்ட தென்று கண்ட்ராக்டரிடம் கூறினீர்களா?

வேலைக்காரர்கள்;—சொல்லத்தான் அவசரமவசரமாக மண்ணைத் தோண்டுகிறோம். அவர் மண்ணுக்குள் கிடக்கிறார்.

0 0 0

புதிதாகப் பள்ளிக்கூடம் சென்ற ஒரு சிறுவனிடம் தந்தையார் வகுப்பு சம்பந்தமான செய்தியைவிசாரித்தார்.

தந்தை:—மாணவர்கட்கு உட்காருமிட மெப்படி யிருக்கிறது?

சிறுவன்:—எல்லோருக்கும் உட்கார "பெஞ்ச்"கொடுத்திருக்கிறார்கள். ஆனல் ஒரு பெரியபையன் மாத்திரம் வகுப்பின் நடுவில் தனியாக நாற்காலியிலுட்கார்ந்திருக்கிறான்.

தந்தை:—என்ன! பெரிய பையனு? அவன் என்ன செய்கிறான்?

சிறுவன்:—அவன் ஓயாது தூங்குகிறான். விழித்தபோது 'சத்தம்போடாதே' என்கின்றான். சிலவேளை யாரையாவது அடிக்கிறான்.

— —

டிவா வேரிலுள்ள (புனைட்டெட் டேஸ்) லாரலில் மிஸ் ஜீன் ஹட்லன் என்னும் 8 வயதுப் பெண் ரேடியோ ஆப்பரேட்டராக லைசென்ஸ் அளிக்கப்பட்டனளாம். உலகத்திலேயே "ரேடியோ ஆப்பரேட்டராக" லைசென்ஸ் பெற்ற சிறு பெண் இவளொருத்தியேயாம்.



# சைகோன் முதலாளிகள் கூட்டம்.

## 15 வருஷத் தவணை முடியாது.

## 5 வருஷத்தில் வெண்ணலைக் கடன் தீரவேண்டும்; அல்லது நிபந்தனைவேண்டாம்.

## மற்ற பாங்கர்களைப் பின்பற்றுதல் தப்பிதம்.

## ஒருவருக்கு வரும் கஷ்டம் எல்லாருக்கும் வந்ததே.

கானுடுகாத்தான் ஜூன் 12—செய்கோன் ஆபத்தை உத்தேசித்து நேற்றுக்காலையில் செட்டிநாட்டு அரண்மனையில் செய்கோன் முதலாளிகள் மகாநாடு ஒன்று நடைபெற்றது. சென்னை மேயர் குமாரராஜா முத்தையாசெட்டியார் தலைமைவகித்தார். கீழ்குறிப்பிடப் பெறும் கனவான்களும் பிறரும் கூடியிருந்தனர்.

கானுடுகாத்தான் வெ. வீர. அரு. சுப்பையா செட்டியார், பள்ளத்தூர் சொ. மு. அ. மெ. ராமசாமிசெட்டியார், ஷிராவ் பகதூர் உ. அ. பெரி. மு. அரு. அருணுசலம் செட்டியார் ஷி வெ. சி. அ. ராம. அண்ணுமலை செட்டியார், காரைக்குடி அ. உ. நாச்சியப்பசெட்டியார், ஷி அ. உ. லட்சுமணன் செட்டியார், ஷி மு. அ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார், பி, அ. மு. முத்தையாசெட்டியார், அ. நா, நாக. நாகப்பசெட்டியார், ராம உ. ராமசாமிசெட்டியார், அரு பள சி. ப. மாணிக்கம்செட்டியார், மெ. நா. மெ. மெய்யப்பசெட்டியார், வீர. வ. ராம. ராமசாமி செட்டியார், கோட்டையூர் வெ. சி. அள. அருணுசலஞ்செட்டியார், வெ சி அ ராம அண்ணுமலை செட்டியார் செக்காலை அரு. ராம சித சிதம்பரம்செட்டியார், அமராவதி புதூர் அ ராம. சிதம்பரம் செட்டியார், ஷண்கமுநாதபுரம் ராம நாகப்பசெட்டியார், தேவகோட்டை ராம. மெ. சித. வைரவன்செட்டியார், ஷி வெ. நா. மு. ராமநாதன் செட்டியார், ராமச்சந்திரபுரம் பெ. மு. சா. சாத்தப்ப செட்டியார், ஷி மு, மு. கு. குட்டையன் செட்டியார், பெரி. மு. முத்துக்கருப்பன் செட்டியார், விஸ்வநாதபுரம் பி. கு. நா. நாகப்பசெட்டியார், ராயவரம் அ. கு. அரு. குமரப்பசெட்டியார், கொத்தமங்கலம் சி. அ. சி அரு. காசிநாதன் செட்டியார், பலவான்குடி வெ. சு. முத்துவள்ளியப்ப செட்டியார், ஆத்தங்குடி சுப. அரு. சி. கருப்பன் செட்டியார், கோனுப்பட்டு சு. மு. ராம. முரு. முருகப்ப செட்டியார், கீழச்செவல்பட்டி நாகி. வெ. வெள்ளையப்ப செட்டியார், செ. ப. மு. சுப்பையா செட்டியார், மு. சா. மு. ப. சாத்தப்ப செட்டியார், சு. வெ. சொக்கலிங்கஞ்செட்டியார், ஷி சித. லெ. சுப்பையா செட்டியார், குருவிக்கொண்டான்பட்டி கு. ம. சித. சிதம்பரம் செட்டியார், வே குப்பட்டி கு. ராம. ராமன் செட்டியார், பாகனேரி பெரி. அ. மு. முத்துக்கருப்பன் செட்டியார், உலகம்பட்டி கரு. பள. சுப்பையா செட்டியார்,

### தீர்மானங்கள்.

கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின:—

சைகோன் நீண்டகாலக் கடன் அதிகாரி, செட்டியார்கள் கடன்வசூல் ஒப்பந்தம் சம்பந்தமாக உடனே முடிவு கூறும்படி வற்புறுத்தலாகாதென்று கேட்டுக்கொள்வதாக பிரஞ்சு இந்தோ-சைனு கவர்னர் ஜனரல், சைகோன் கவர்னர், சைகோன் பிரிட்டிஷ் கான்சல் ஆகியோருக்கு தந்தி மூலம் அறிவித்துக்கொள்ளல்.

சைகோன் செட்டியார் கஷ்ட நிவாரணம் சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசாங்கம் இதுவரை எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுக்கு நன்றி பாராட்டுவதோடு, இனியும் சைகோனில் செட்டியார்கள் பூரண நன்மை பெற வேண்டுவன செய்ய பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுவதாகத் தீர்மானிக்கப்பட்டு இச்செய்தியைத் தந்தி மூலம் சென்னை கவர்னர், இந்திய வைசிராய், இந்தியா மந்திரி, பிரிட்டிஷ் அந்நியநாட்டு மந்திரி, ராமசாமி முதலியார் ஆகியோருக்கு அறிவிப்பதென்றும் முடிவு செய்தனர்.

கீழ்க்கண்ட சாரமடங்கிய செய்தியை சைகோன் செட்டியார்களுக்குத் தந்தி மூலமும் கடித மூலமும் அறிவிப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

"நீண்ட காலக்கடன் இலாகா உத்தியோகஸ்தரோடு உள்ள புதிய ஒப்பந்தத்தில் முதல் பதிவிற்கு 100க்கு 22 விதமும், இரண்டாவது மூன்றுவது பதிவுகளுக்கு 100 க்கு 35 விதமும் குறைத்துக் கொள்ளுவதென்றிருக்கிறது. இவ்வொப்பந்தத்திலுள்ள இதர விதிகள் அங்குள்ள பாங்கர்களுக்கு ஒப்ப நாமும் ஒத்துக்கொள்வதென்று இருக்கிறது. பாங்கர்களுக்குப் பெரும்பாலும் முதலாவது ஈடாகவே இருக்கிறது. ஆனல்செட்டியார்களுக்கு வசூலாக மார்க்கமில்லாத பெருந் தொகைகள் தள்ளிக்கொடுத்து ஏற்கனவே நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. ஆதலால் இப்போதும் நம்மை 100க்கு 22ம், 35ம் விதம் தள்ளிக்கொடுக்கும்படி வற்புறுத்தி நாமும் ஒத்துக்கொள்வதென்பது, நஷ்டமடைந்தவர்களே மேலும் மேலும் நஷ்டமடையுங்களென்று கட்டாயப்படுத்துவதாகவிருக்கிறது. ஆதலால் நாம் இதற்கு இசைவது பாங்கர்களை விடப் பெரும் நஷ்டத்தை யனுபவிக்கச் செய்யும்.

பாங்கர்கள் பேசி முடிவுசெய்கிறபடி நாமும் யாவற்றையும் ஒப்புக்கொள்ளுவது என்றிருத்தல் தவறு. நாம் நேரே செல்லவேண்டியதற்குச் செல்லவேண்டும். நாமும் வக்கீல்களும் போகமுடியாத சந்தர்ப்பங்களில் தக்க மனிதர்களைக்கொண்டு ஒவ்வொன்றின் சாதக பாதகங்களை ஆராய்ந்து நமக்கு அனுகூலமான முறையிலேயே முடித்தல்வேண்டும். தற்பொழுது சைகோனிலுள்ள அவுக்காமார் (வக்கீல்கள்) திருப்திகரமாகவில்லாவிடின், அவர்களை அகற்றி வேறு சுக்காரை நியமித்தல்வேண்டும்.

சர்க்கார் அக்கிரமமாகவோ நிர்ப்பந்தமாகவோ ஏதேனும் ஒருவர்மீது ஒரு காரியத்தைச் செய்ய முற்பட்டால் அதனை அனைவருக்கும் வந்ததாகக் கொள்ளவேண்டும். அவ்வாறு எதுவும்நேராதபடி அனைவரும் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக யாவற்றையும் புரிதல்வேண்டும். செலவுகளை பொதுவிலேயே செய்தல்வேண்டும்.

நீண்டகாலக் கடன் அதிகாரி இனிமேல் ஏற்படுத்தும் நிபந்தனைகளை நீங்கள் அனைவரும் நன்கு ஆராய்ந்து பின்னர் இங்கு அறிவித்துப் பதில் கிடைத்த பின்னரே ஒப்பந்தங்களில் கையெழுத்துப்போடலாம். அவ்வாறு செய்ய போதுமான அவகாசம் கொடுக்கப்படாவிடின் தந்திமூலம் தகவல் அறிவித்துப் பதில்கிடைத்து வேண்டுவன செய்தல்வேண்டும்.

முதலாவது ஈட்டுக்கடன்மீது கிரதிலோங்தர்ம் கூறுவதுபோல் 100க்கு 78 வாங்கிக்கொள்ள ஒத்துக்கொள்ளுவதும், இதர விஷயங்களில் கட்டாயப்படுத்தாது விட்டுவிட்டு ஊர் நல்ல நிலைக்கு வந்த பின்னர் வரவர வாங்கிக் கொள்ளலாம் என்பதுமே நல்லதாக நாங்கள் கருதுகிறோம். அவ்வாறின்றி நாம் கடன் கொடுக்கும் ஆசாமி, வேறுள்ள எல்லா பாக்கிகளுக்கும் நாம் சொல்லுகிறபடி 100க்கு 65 விதம் பைசல் செய்வதில் மூன்றில் ஒருபங்கு ரொக்கமும், பாக்கியை ஐந்து வருடத் தவணையில் அரை வட்டியுடன் வருஷா வருஷம் தரவேண்டுமென்றும் கேட்க வேண்டியது. எந்தக் காரணத்தைக் கொண்டும் வட்டியில்லாமல் 15 வருடத் தவணைக்கு ஒத்துக்கொள்ள வேண்டாம், 15 வருடத்தில் நெல்விலை கூடிவந்தால் தான் கடனையடைப்பது இல்லாவிடில் செலவு எழுதுவது என்ற நிபந்தனைக்கு ஒத்துக்கொள்ளலாகாது. நமக்கு பணம் தருவதற்கு நெல்விலையை ஒரு காரணமாகக் கொண்டு எந்த விதமான ஒப்பந்தமும் நாம் செய்யலாகாது.

முன்போல் அங்குள்ள விஷயங்களை அடிக்கடி அறிவிக்காதநிலிருந்து மனச்சோர்வும் கவலையும் ஏற்பட்டிருப்பதாக அறிகிறோம். அவ்வாறு சோர்வுறுதல் கூடாது. ஒவ்வொரு நடவடிக்கையையும் விபரமாக இங்கு ராஜா சர். அண்ணுமலை செட்டியாருக்கும், அட்வகேட் கே. ராமநாதன் செட்டியாருக்கும் அறிவித்து வருதல் வேண்டும். அங்குள்ள நடவடிக்கைகள் யாவற்றையும் உடனுக்குடன் பிரான்சிலிருக்கும் லாயர்களான உத்தரே, கலே, ராமசாமி முதலியார் ஆகியோருக்கு அறிவித்தல் வேண்டும்;

சைகோனில் முன்னர் அவுக்காலாகவிருந்த சிரார் தற்பொழுது பிரான்சில் மிகவும் செல்வாக்குடனிருப்பதாகக் கேள்வி. தேவையானல் அவரையும் லாயராகவும் நியமிக்கவும்

ஒப்பந்தத்தில் இதர ஸ்தாபனங்களுக்குப் பூரா வட்டியும் முதலும் கொடுத்து விடுகிறதென்று இருக்கிறது. பிராங்கோ சீனுவர் வங்கிக்காரன் அம்மாதிரி கொடுப்பது நியாயமில்லை என்றும், கடன் கொடுத்தவர்கள் எல்லோரும் ஒரே மாதிரிதான் என்றும் ஆட்சேபித்திருப்பது மிகவும் நியாயமானதே. அவ்வாறே நாமும் எந்தஸ்தாபனத்திற்கும் முன்னதாக வட்டியும் முதலும் கொடுக்கலாகாதென்றும், எல்லோரும் ஒரேமாதிரியாகத்தான் கொடுக்க வேண்டுமென்றும் வற்புறுத்தவேண்டும். சைகோனிலிருந்துவரும் தந்திகளாலும், கடிதங்களாலும், அங்குள்ள கிர்ப்பந்தத்தின் நிலைமையும் நம்மவர், கவலையும், அலோர்தல் கொதியின் அதிதியும் விளங்குகிறது அதற்காக அதைரியமடைய வேண்டாம். பொறுமையாக ஆத்திரப்படாமல் நாம் செய்யவேண்டியவற்றை ஒழுங்காகச்செய்து வந்தால் நிச்சயமாக நமக்கு வெற்றி கிடைக்கும். இவ்வகையில் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் நமக்கு உதவியளித்துள்ளார்கள்.

ஸ்ரீ. ராமசாமி முதலியார் வேண்டிய வேலைகள் செய்துகொண்டிருப்பதாகவும், விரைவில் அனுகூலம் கிடைக்குமென்றும் அறிவித்துள்ளார்.

பகல் சாப்பாடு சிறந்த முறையில் செட்டிநாட்டு பாலஸில் நடைபெற்றது. (ஒரு நிருபர்)

# யூஜின் சாண்டோவின் சுயசரிதை.

(சென்ற வாரத்தொடர்ச்சி)

நான் என்னசொல்லியும் கேட்காமல் என்னைத்தள்ளு வண்டியொன்றில் ஏற்றி ஓர் கூனனை அப்பெரிய கொட்டகையைச் சுற்றிவரச் செய்தான். நான் இவ்வாறு செய்தால் ஜனங்கள் என்னை ஏசாரா என்றதற்கு என்னை யார் அறிவார்கள் என்றான். ஆனால் மறுநாள் தினசரி பத்திரிகையில் பலசாலிக்கு நடக்க பலம்போதவில்லை என்ற தலையங்கம் தோன்றியது. நான் என் பீட்ஸ் செய்து கொண்டிருந்த பொழுது சிகாகோவில் உலகச்சந்தை கூடியிருந்தது. அது இரண்டு மாதம் வரை கூடியிருக்கும். அச்சந்தை பிரிந்தது. மானேஜர் ஜேக்பெல்ட் என்னை அமெரிக்காமுழுவதும் பிரயாணம் செய்யத் தூண்டினர். நானும் ஒப்புக்கொண்டு அவரையே மானேஜராக்கிக் கொண்டேன். முக்கியமான எல்லாவிடத்திலிருக்கும் கொட்டகைகளையும் சில தினங்களுக்கு வாடகைக்குக் கேட்கப்பட்டது. ஓர் ஸ்பெஷல் ரயிலும் மோட்டாரும் ஏற்படுத்திக்கொண்டோம். இச்சமயத்தில் என் பீட்ஸ்களை, அவ்வாறே திரும்பவேனும் அல்லது சிலமாறுபாடுடன், நால்வர் மெச்சத்தக்க வண்ணமாவது' எவன் செய்வானே அவனுக்கு 10,000டாலர் பரிசளிப்பதாக வெளிப்படுத்தி ஓர் அமெரிக்கன் வங்கியில் அத்தொகையும் கட்டப்பட்டது.

அதிகமாக பீர் உற்பத்தி செய்யும் இடமாகிய செனட் லூயிஸ் என்னுமிடத்திலிருந்த ஓர் வாலிபன் என் விளம்பரத்தைப் பார்த்து என்னைக்காணவந்தான். அவன் "நீர்செய்யும் எல்லா பீட்ஸ்களையும் என்னால்செய்யமுடியும்" என்றான் நான் நல்லது வேறொன்றும் வேண்டாம். ஒரு கையினால் இந்த முன்னூறு ராத்தல் டம்பெல்லைத் தலைக்குமேல் தூக்கி இறக்குவாயானால் பந்தயப் பணத்தை கொடுத்து விடுகிறேன் என்றேன் அவனும் ஒப்புக்கொண்டு சிலகாட்கழித்து வருவதாய் சொல்லி விடைபெற்றுச் சென்றான். அந்நாளும் வந்தது. அவனும் வந்தான். சாமான்கள் தயாராய் வைக்கப்பட்டன. ஆனால் அப்பையன் இது தமாஷாவென்றல்லவோ நினைத்தேன். இவ்வளவுக்கு வந்துவிட்டதே. இனி என்னசெய்வேன் என்று சொல்லிக்கொண்டே வெளியே நோக்கி ஓட்டமெடுக்க அவன் பலத்தில் நம்பிக்கை கொண்ட நண்பர் சிலர் அவனைப்பிடித்து வந்து அதைத் தூக்கும்படி வற்புறுத்தினர். இவன் பயம் தெளியட்டுமென்று என் மானேஜர் அவனை அழைத்து, இரண்டுகைகளினால் டம்பெல்லை தூக்கினால்போதும். உனக்கு டாலர் 10000,கொடுக்கிறேன் என்றார். முன்புதான் முட்டாளாக்கிக் கொண்டதைப்போல் மறுபடியும் முட்டாளாக்கிக் கொள்ள முயலவில்லை. அனுபவம்நல்ல போதனை. சிறியவன் அல்லவா! எனக்கு அவன்மேல் காருண்யம் உண்டாக இன்னும் அவனை ருஜுபடுத்தி இரண்டு கைகளாலும் மார்புயரம் தூக்கினால் பந்தயம் ஜெயித்தவனுவாய் என்றேன். அவன் நேசர்களின் வற்புறுத்தலால் அவ்வியாயாமத்தை செய்ய முன்வந்தான். ஆனால் ஐயோ, பாவம், அப்பவனால் அப்பளுவை பூமியினின்றும் அசைக்கவே முடியவில்லை.

## அத்தியாயம் 9
### சான் பிரான்ஸிஸ்கோவில் சிங்கத்துடன் சண்டை.

நான் செய்த வேலைகளில் மிகவும் பிரசித்திபெற்றதும், மிக்க பயங்கரமானதும், நான் 'சான்ப்ரான்ஸிஸ்கோவில் ஓர் சிங்கத்துடன் செய்த சண்டையே யாகும். மழைக்காலச்சந்தை அங்கு கூடியிருந்தது. அங்கு நானும் வேடிக்கை காட்டப்போனேன். அவ்விடத்தில் கர்னல் போனென்பவர் தன் மிருகங்களோடு வந்து ஓர் காட்சிசாலை திறந்திருந்தார். அவர் ஓர் காடிக்கும் சிங்கத்திற்கும் சண்டையிட்டு ஒன்று சாகும் பரியந்தம் சண்டை நடக்குமென்று விளம்பரம் செய்தார். 20,000 ஜனங்கள் இருக்கக் கூடிய கூடாரம் ஒன்று போடப்பட்டது. ஆயிரக்கணக்கான ஜனங்கள் முன்னதாகவே டிகட் வாங்கிவிட்டார்கள். ஆனால் போலீஸ் அதிகாரிகள் அந்தச் சண்டை செய்ய விடக்கூடாது என்று உத்தரவு போட்டார்கள். எனவே சண்டையை நிறுத்த வேண்டியதாயிற்று.

ஆனால் நான் போனிடம் சென்று நான் சிங்கத்துடன் சண்டை போடுவதாக ஒப்புக்கொண்டேன். போலீஸ் உத்தரவும் கிடைத்தது. மறுநாள் பத்திரிகையில் இந்த விளம்பரம் காணப்பட்டது:—

குஸ்தி, குஸ்தி!!

சாண்டோவுக்கும் சிங்கத்திற்கும் சான்பிரான்சிஸ்கோ குளிர்காலச் சந்தையில் குஸ்தி!!!

மனிதருக்கும் மிருகத்திற்கும் உள்ள வித்தியாசம் என்னவென்றால் எதிரிகளை அடித்துத் தாக்கத் தகுந்த கூரிய நகங்களும் பற்களுக்கும் உண்டென்பதாம். நாம் குறிப்பிடுகின்ற சிங்கம் மகா பயங்கரமானது பலமானது, கொழுத்தது, கோபமுடையது. ஒருவாரத்திற்கு முன்பே தன் அறையை சுத்தம் செய்வோனை விழுங்கியது. மற்றெல்லா சிங்கங்கட்கும் அரசென சொல்லத் தகுந்தது. நான் கேட்டபடி எனக்கு சிறுகத்தியும் கொடுக்கமறுத்தனர், நான் சண்டை செய்ய விரும்பினால் நிராயுதபாணியாகவே செல்லவேண்டு மென்றார்கள். ஆனால் சிங்கத்தின் கால்களுக்கும் வாய்க்கும் கனத்த தோலாலான உறைகள் போட சம்மதித்தனர். இருப்பினும் மனிதசக்திக்கும் மிருகபலத்திற்கும் சண்டை யென்பதை மறக்க முடியாது. கர்னல் போன் இவ்வுறை அதற்கெம்மாத்திரம்? ஒரே அறையில் உன் தலையை கிறிவிடுமென்றார். ஆனால் எனக்கு சிங்கத்தினிடம் பயமே ஏற்படவில்லை. சிங்கத்துடன் எப்பொழுது சண்டைபோடுவது என்று ஆவலுடன் எதிர்நோக்கினேன். மேலும் ஆயிரக்கணக்கான ஜனங்களின் முன் சண்டைபோடுவதற்கு முன் ஒருமுறை தனியே சண்டை செய்யவேண்டு மென்று கேட்டுக் கொண்டேன். பலமனிதர்களால் பலத்த வலைகளைக் கொண்டு வெகுநேரம் மிகுந்த கஷ்டப்பட்டு சிங்கத்தின் கால்களுக்கும் முகத்திற்கும் உறைகள் போடப்பட்டன.

இருப்புக்கூண்டு! ஓர் பெரிய கூண்டு ஒன்று கொண்டுவரப்பட்டது. அது 70 அடிசதுரமுள்ளது. ஆங்கு சிலரே இருந்தனர். போன்சிங்கம் பழக்கும் நிபுணரானதால் கூண்டிற்குள் சிங்கத்தை விடுத்தார். எனக்கு அதை ஜெயிக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் சிலர் இச்சண்டையே இவன் முடிவு போலு மெனவும் கருதினர்.

நானும் என்எண்ணத்தைப்பூர்த்தி செய்ய சமயம் நேர்ந்ததை நினைத்து உளம்பூரித்து லங்கோடணிந்துகூண்டிற்குசென்றேன். கோபம் கொண்ட மிருகேந்திரனோ கோபத்தால் அக்கினித் துண்டுகளே என்னும்படி சிவந்த கண்களுடன் தாவுவதற்காக பதுங்கி இருந்தது. சிங்கத்தைப்பற்றி படித்ததெல்லாம் எனக்கு ஞாபகமிருந்தது. அது என்மேல் பாய்ந்ததும் நான் சற்று விலகவே அது என் பக்கத்தில் வந்து உடனே மூச்சுவிடவும் நேரம் கொடுக்காமல என் இடது கையினால் அதன் குரல்வளையும்வலது கையினால் அதன் இடுப்பையும்பற்றி அப்படியே என் மார்புயரம் தூக்கி அது கிடுகிடுக்கும்படி தரையில் மோதினேன். அச்சிங்கம் 530 ராத்தல் எடையுள்ளது. முதலில் அடிப்பட்ட சிங்கம் பெருத்த கோபத்துடனெழுந்து தன் முன் காலினால் அறையவந்தது. அதன் வேகம் என் தலையையும் பெயர்த்துவிடுமோ என்று நானே பயந்தேன். பின்பு சற்றுத் தலையைச் சாய்த்து மார்புடன் மார்பிறுக மட்டில்லா வலியுடன் பிடித்துக் கொண்டேன். அதன் கால்கள் என் தொடைகளிலும் புயங்களிலும் பல இடங்களில் சதையை பெயர்த்தனவெனினும் என் பிடியினின்றும் அதனால் விலகமுடியவில்லை. எனவே சமயம் பார்த்து அதைத் தூக்கி எறிந்தேன். சிங்கத்திற்கதிபதியான போன் என்னை வெளிவரும்படி கூவினர். சிங்கத்தின் கோபத்திற்கோ அளவில்லை, எனினும் மற்றுமொரு பீட் செய்யத் தீர்மானித்தேன்.சிங்கத்திற்கு என் முதுகைக் காட்டி நின்றேன். அவ்வாறிருந்தால் சிங்கம் என் முதுகின்மீதேறும் என்று நான் அறிவேன். அதுவும் அவ்வாறே செய்தது. என் கைகளை உயர்த்தி அதன் கழுத்தைப்பற்றி, வண்ணான் வேஷ்டி துவைப்பது போல, அதை எனக்கு முன்னால் பூமியில் விழும்படி கீழே விட்டெறிந்தேன். பொறுத்திருந்த போன், இப்பொழுது இரண்டு சுழலும் துப்பாக்கிகளுடன் சிங்கம் என்னிடம் வாராமல்தடுக்க,உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை சிங்கத்தின் நகத்தால் செய்யப்பட்ட காயங்களில் ரத்தம் ஒழுகக்கூண்டினின்றும்வெளியே வந்தேன். ஆனால் சிங்கத்தை ஜெயித்தேன். அது எனக்கு அடங்கியது. மறுநாள் பல ஜனங்கள் பார்க்க அதை அடக்குவது பிரமாதமாகாது என்று உணர்ந்தேன். மறுநாள் சண்டை போடும் சமயம் வந்தது. உறைகள் போடும் பொழுது கூண்டின் இரண்டு கம்பிகளை முறித்துக் கொண்டு வெளியேறிற்று. 20000ஜனங்களுக்கு மேல் அங்கு வந்திருந்தார்கள். இடம் போதாமல் புளி மூட்டைகள் போல் ஜனங்கள் ஒருவரை ஒருவர் நெருக்கிக் கொண்டிருந்தனர். வீராவேசம் பேசியவர் எல்லாம் சிங்கம் வெளிப்பட்ட சங்கதி கேட்டதும் ஓட்டம் பிடிக்கலாயினர். ஜனங்கள் கூச்சல் சகிக்க முடியவில்லை. ஆனால் சிங்கத்தின் முன் நின்று நான் அதைக் கூர்ந்து கவனித்த போழ்து பெரிய இடி விழுந்தாற் போல் அச்சிங்கம் அசைவற்று நின்றது. அவ்வாறே என்னை நின்று அதைப்பார்த்துக் கொள்ளும்படி சொல்லிவிட்டு, ஓர் சுழல் துப்பாக்கியுடன் ஆங்கு ஓர் கூட்டைக் கொண்டு வரச்செய்தனர். நான் ஓர் குதி குதித்து சிங்கத்தின் முதுகின்மேல் ஏறினேன். சிங்கமும் கூட்டினுள் சென்றது. என்னுடைய உதவியினல், உறைகளும் போடப்பட்டன.

முதலில் சிங்கம் பிரவேசிக்க பிறகு நான் உள்ளேவர, எழுபதடிக் கூடு கம்பீரமாய் காணப்பட்டது. ஜனங்கள் ஆரவாரித்தனர். ஜனங்களெல்லாம் வெகு பயத்துடனிருந்தனர் புகைப்படம் பிடிப்போர் தங்கள் காமிராக்களுடன் தயாராயிருந்தனர். முதல் நாள் வாங்கின அடிமறவாத அரசமிருகம் நாய் குட்டியைப் போல் பதுங்கிபாதங்களை நக்கிற்று. அது என்னை தன் குருவாக பாவித்து என்னுடன் சண்டை செய்யமறுத்தது எவ்வளவோ முயன்றும் அது சும்மாவிருந்தது. அதன் வாலைப்பிடித்து முறுக்கினேன் உடனே அது என் மீது பாய்ந்து நான் அதன் லக்ஷியத்தை மாற்ற சற்று விலகி அதைப் ஒரே பிடியாய் பிடித்து தூக்கி விட்டெறிந்தேன். இச் சண்டை இரண்டு நிமிஷங்கள் நடைபெற்றன. பிறகு அது என்முன் நிற்கவும் சம்மதிக்காமல் கீழே பதுங்கி இருந்தது. ஜனங்கள் இதைப்பழகி இருக்கிறார்கள் என்று நினைப்பார்களே என்று சந்தேகித்தேன். ஆனால் ஜனங்கள் என் தீரத்தைப்பற்றி வெகுவாகப் புகழ்ந்ததுபற்றி மகிழ்ச்சி அடைந்தேன்.

(தொடரும்)





சிறுகதைப் பகுதி.

# சுந்தரியின் துணிபு.

(உ. அரு. மலாக்கா.)

பர்வதபுரியில் பாவலர், நாவலர் பலரும் கண்டு வர்ணிக்கத்தக்க 'பாலசிங்க விலாஸ்' என்ற நூதனமாளிகையின் சொந்தக்காரரான பாலசிங்கம் பிரபு ஓர் நாள் மாலை அம்மாளிகையின் பூஞ்சோலையில் அமைக்கப்பெற்ற கொடிவீட்டில் வீற்றிருந்தவர் உரத்தகுரலில் வீரசிங்கம், வீரசிங்கம், என்றுகூவி அழைத்தார். ஏதோ ஓர் புத்தகத்தை ஊன்றிப்படித்துக்கொண்டு, கம்பீரமும், பொறுமையும் தயையும் ததும்பிய முகமும், மனதிற் பதியக்கூடிய வசீகர தோற்றமும், அன்பு, அருள், ஆண்மை வாய்மை, உறுதி, கண்டிப்பு இவ்வருங்குணங்கள் படைத்தவனுமாகிய வீரசிங்கம் இதோவந்தேன் தந்தையே, நமஸ்காரம், என எதிர்கொண்டு நின்றான்.

நின்ற மைந்தனைப் பார்த்து பாலசிங்கம் பிரபு "வீரசிங்கம், நேற்று நான்சொல்லிய வார்த்தைகளுக்கு முடிவென்ன? உன்னைப் பள்ளியில் விட்டிருந்ததருணம் வலியவந்த பலபெண்களை உனதுவிருப்பப்படிதடுத்துவிட்டேன். இப்போதோ நீபடித்துப்பட்டம் பெற்றுவிட்டாய். இனி விவாகவிஷயத்தில் தடைசொல்லமாட்டாய் அல்லவா" என்றார்.

என்ற பிரபுவைப் பார்த்து மைந்தன் "தந்தையே விவாகவிஷயத்தில் தடைசொல்லவில்லை; ஆனால் நான் காதலித்த அப்பெண்........"

"என்னசொன்னாய்? அப்பெண்ணா? அப்பெண்ணைப்பற்றி இன்னொரு முறை என்னிடம் தெரிவிக்காதே என உனக்கு எத்தனைதரம் சொல்வது? நமது கௌரவம் என்ன அந்தஸ்தென்ன, செல்வமென்ன நாமிருக்கும் நிலையில் ஏராளமான சீதன வரும்படியுடன் பெண் எத்தனையோ வர, அதை விடுத்து, சொத்து, சுதந்தரமில்லா அந்த சோமசுந்தரம் மகளை உனக்கு விவாகமுடித்தால் ஊரார் என்னஞ் செய்யமாட்டார்களோ?" என்றார் பாலசிங்கம் பிரபு.

"தந்தையே செல்வமிருந்தென்ன? சீதனம் வந்தென்ன? அது நிச்சயமற்ற பொருளன்றோ? இன்று நம்மிடத்திலுள்ள அச்செல்வம் நம்மைவிட்டகலாதோ? சீதனத்துடன் வந்த பெண்ணும் சீக்கிரம் பிறந்தகம் சென்று விடுவாளன்றோ?" என்று கேட்டான் வீரசிங்கம்.

"வீரசிங்கம் நீயோ அறியாச்சிறுவன். அது உலகவழக்கம். நீ இப்போது காதலிக்கும் அப்பெண் சுந்தரியும் அவள் தந்தையின் வறுமையை ஒழிக்க நம்செல்வம் ஆதரவாயிருக்கும் என்றே உன்னிடம் காதல் கொண்டிருப்பாள்" என்றார் பிரபு.

"தந்தையே தாங்கள் அவ்விதம் எண்ண வேண்டாம். என தன்புள்ள காதலி சுந்தரி அக்கருத்துடையவளல்ல, 'காதலொருவனைக்கைபிடித்தே யவன்காரியம் யாவினுங்கைகொடுத்து மாதரறங்கள் பழமையைக் காட்டிலும் மாட்சிமை பெறச்செய்துவாழ்வமடி' என்ற பாரதியார் வாக்கைக் கடைப்பிடித்தொழுகுபவள். கல்வி அறிவால்எனக்கு நிகரும் இன்ப துன்பங்களில் சமமாய்ப்பங்கெடுப்பவள்"

இத்தருணம் சேவகன் ஒரு தந்தியைக் கொண்டு வந்து பிரபுவிடம கொடுத்தான். பிரபு தந்தியை வாங்கிப்பார்த்ததும் ஹா! மோசம் வந்ததா? குடிகெட்டு விட்டதே. இனிஎன்செய்வேன்? ஏழ்மையை அடைந்தால் எனது மைந்தன் விவாகம் எவ்விதம் முடிப்பேன் என்று அலறி அழுது மூர்ச்சையாகி விட்டார். வீரசிங்கத்துக்கோ ஒன்றும் புலப்படவில்லை, உடனே தந்தையை வாரி எடுத்து மாளிகைக்குள் கொண்டுபோய் படுக்கையில் படுக்கவைத்து களைப்பாற்றிப் பிறகு தந்தியைப்பார்க்க அதில் செல்வபுரியில் அவர்கள் பாங்கி முறிந்துவிட்டதாய் இருக்கவே, அதற்காக கலங்காது "இச்சைகொண்டபொருளெல்லாம் இழந்து விட்டபோதினும், பிச்சைவாங்கி யுண்ணும் வாழ்க்கை பெற்று விட்டபோதிலும், அச்சமில்லை' என்றபாரதியார் வாக்கைக்கவனியுங்கள். இது உலக இயல்பு இதற்காகக் கவலையடைவது அறியாமை. செல்வம் இன்றுபோகும் நாளைவரும்" என தந்தையைத்தேற்றி தான் செல்வபுரி சென்று கவனித்து வருவதாய் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான் வீரசிங்கம்.

0 0 0

ஓர் சிறிய வீட்டின் முன்கட்டில் விசனமே வடிவமாய் உட்கார்ந்திருந்த சோமசுந்தரம் என்பவர் பொன்னிறமேனியும், களிகொண்டமுகமும், முகிலைப்பழித்த குழலும், குயிலைவென்ற தீங்குரலும், சொல்லற்கரிய எழிலையும், காண உருவமற்ற அம்மதவேளும் உண்மைத் தோன்டாற்றுவானே என்றெண்ணும்படி வனப்பு வாய்ந்த தனது அருமைச்செல்வி சுந்தரியைப் பார்த்து "பெண்ணே எனது வறுமைப்பிணியை உன்னால் ஒழிக்க வேண்டியதிருக்க நீயோ வீரசிங்கத்தின் மேல் காதல் கொண்டிருப்பதாய் தெரிவிக்கிறாய்; அவனோ தனக்கு சொந்தமாயுள்ள செல்வபுரியின் பாங்கி முறிந்துவிட்டதாய் சென்றவன் திரும்பவேயில்லை. எனது நிலைமையோ ஓரிரண்டு மாதங்களுக்கு மேல் தாளமுடியாது. நாற்புறமும் கடனும் கடனுக்கு மிஞ்சிய வட்டியும் ஆளை விழுங்கி விடும் போலிருக்கிறது. அதோடு ஹாஜி உசேன் ஷேட்டும் அவர் பாக்கிக்காக வீட்டிற்கு சப்தி எடுத்துவிட்டார். அதற்கீடுசெய்ய உன்னையன்றி வேறுகதியில்லை. என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார்.

அவ்வாரணங்கு தந்தையைப்பார்த்து "பிதாவே பெற்றோர் இஷ்டத்தைப் பூர்த்தி செய்வதே பிள்ளைகளுக்கழகு என்பதொரு புறமிருந்தாலும் உங்களிஷ்டப்படி என்னை யாருக்கேனும் பெரும்பொருள் தருவோருக்குக் கட்டிக்கொடுங்கள் என்று நான் சொன்னால் எனது காதலனுக்கு முன்னம் கொடுத்த வாக்குறுதியை மீற வேண்டுமே" எனக்கேட்டாள் சுந்தரி.

"சுந்தரி வீரசிங்கம் முன்போலிருந்தாலும் அவன் செல்வத்தால் உன்னையும் ஆதரித்து எனது வறுமைப் பிணியையும் ஒட்டுவான். அவனோ இதுபோழ்து பரமதரித்திரனாய் இருக்கிறான். இன்னும் சிலநாட்களில் பங்களா, வீடு பலவும் ஏலத்துக்கு வந்துவிடும். இந்நிலையில் அவன் எப்படி உன்னை ஆதரிக்கமுடியும். ஆகவே அவ்வெண்ணத்தை மாற்றி அமரசிங்கம் பிரபுவை மணம் செய்துகொண்டாயானால் அத்தனைக்கும் சுகமுண்டு" என்றார் சோமசுந்தரம்.

"ஹா தந்தையே அமரசிங்கம் பிரபுவையா மணம் செய்துகொள்ளச் சொல்லுகிறீர்கள் நல்ல மாப்பிளைதேடினீர்கள். பேஷ். நன்று. நன்று. நாளைக் காடு வாவென்றும் வீடு போவென்றும் நாணமற்ற நாடிதனர்ந்த அக்கிழவனுக்கா என்னைக் கட்டிக்கொடுக்க எண்ணுகிறீர்கள். அக்கிழவரின் கடைசி மகனுக்கேஎன் வயதிருக்குமே! அவர் மூன்று கலியாணம் செய்தது போதாதென நான்காவதும் செய்ய எண்ணுகிறாரா?" என்று கேட்டாள் நங்கை.

"செல்வி நாமென்ன செய்வேன்? எனது வறுமையை ஒழிக்க வழி நீதான் என்று முன்னமே சொன்னேனே, அதே போல் செய்யவே துணிந்தேன், நிச்சயமும் செய்துவிட்டேன். முகூர்த்தமும் வைத்து விட்டேன். அடுத்தவாரம் கலியாணம்" என்றார் சோமசுந்தரம்.

"ஐயோ அடுத்தவாரம் கலியாணமா? கலியாணம் எங்குநடைபெறும்" என்றாள் நங்கை. அமரசிங்கம் பிரபுவின் அற்புதமாளிகையில்" என்றார் சோமசுந்தரம். கேட்டாள் நங்கை சுந்தரி. வெறுப்புற்றாள் ஒன்றும்தோன்றாது. அசைவற்றாள், மூர்ச்சையுற்றாள்.

0 0 0

பந்தல்களாலும், பலகமான் வளைவுகளாலும், வாழை, கமுகு, மகரதோரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்ற பெருத்த மாளிகையில் பாண்டு, மேளம் பலவாத்தியங்கள் ஓர்புறம் கோஷிக்கவும் நடனமாதர்கள், கச்சேரிக்காரர்கள் ஓர்புறம் காத்திருக்கவும் உற்றாருறவினர் பந்துக்கள் சூழ்ந்திருக்கவும் உல்லாசமாய் வீற்றிருந்தார் அம்மாளிகையின் சொந்தக்காரரான அமரசிங்கம் பிரபு. அத்தருணம் அங்கு பெண்வீட்டார் வந்திறங்கினர். உடனே வரவேற்று பசரிக்கப் பெற்றதுடன் அவர்களுக்கென அமர்த்திய ஜாகையில் கொண்டுபோய்விடப்பட்டது. கலியாணத்துக்கு வந்திருந்த பலரும் உற்சாகமாக காணப்பட்டாலும் மணப்பெண்ணாகிய சுந்தரிமட்டும் மனோவியாகுலத்துடனிருக்கிறாள். யாதுகாரணமோ வெனப்பலர் பேசினர்: அப்பொழுது அங்கு வந்துள்ளோரில் ஓர் தேர்ச்சியுற்ற பாட்டி உடனே சுந்தரி இடம்சென்று "பெண்ணே உன்னதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். நம் உறவினரில் உன்னைப்போல் எத்தனையோ பெண்கள் இந்தப்பிரபுவுக்கு வாழ்க்கைப்படவேதாய் வலியவந்தவைகளைத் தடுத்து உன்னையே திருமணம் செய்துகொள்ளவேண்டுமென்று பிரபு ஒரேபிடிவாதமாய்ச் சொல்லிவிட்டார். நீயோ அதிருப்தி கொண்டாயெனக் கேள்வியுற்றேன். நீ முன் எண்ணியபடி அந்த தரித்திரன் வீரசிங்கத்தை மணந்தால் இன்று உனதுடம்பு பூராவும் இழைத்திருக்கும் வயிர நகைகளும், பட்டாடைகளும் என்று காண்பாய்? இதுமட்டிலுமா? இந்தப்பிரபு உனக்கு இன்னும் என்னென்ன வாங்கி வைத்திருக்கிறார் தெரியுமா?" எனக்கேட்டாள் கிழவி.

"பாட்டி ஆடைகளையும், ஆபரணங்களையும் கண்டு ஆசைப்பட்டாயே யன்றி பெண்களுக்கு வேண்டியது அறிவும், அழகுமமைந்த புருஷன் என்பதை மறந்து பேசுகிறாயென்றெண்ணுகிறேன்" என்றாள் நம் சுந்தரி.

"பைத்தியக்காரி, உன்போன்ற சபலைகளை நான் பார்த்ததேயில்லை. கண்டதே காட்சி; கொண்டதே கோலம்; உண்டதே மிச்சம் என்னுமிக்காலத்தில் சுகத்துக்கென்ன குறைவு? அதன்கருத்து தெரியாச் சிறுமி நீ இதைப்போல் கிழவர்களுக்கு வாழ்க்கைப்பட்டு இவ்வுலகில் சுகங்களுடன் வாழும் பெண்கள் நீ பார்த்ததில்லை போலும். பேருக்கு இந்த மாப்பிளையைக் கட்டிக்கொண்டால் வாழ்வு எப்படியும் நடக்கிறது. இதற்கென்னயோசனை" என்றாள் கிழவி.

'பாட்டி' "நீ சொல்வது பொருந்தத்தக்கதாயில்லை. காதலரிருவர் கருத்தொருமித்து வாழ்வு நடத்துவதுதான் சுகமேயன்றி வேறு சுகம் பெண்களுக்கு ஏது? ஏதோ பொழுது விடிந்தால் கழுத்தில் மாங்கல்யம் ஏறிவிடும். பிறகுபார்ப்போம்" எனறாள் நங்கை.

"பெண்ணே யோசியாதே. காலை தாலி கட்டிவிட்டால் முடிந்தது விஷயம், அப்பால் உன் பிரியப்படி செய்யலாம். நேரமாகிறது. படுத்து நித்திரைசெய்" என்று சொல்லி கிழவியும் படுக்கைக்குச் சென்று விட்டாள்.

காலையில் அவரவர்களும் எழுந்து கலியாண வீடாதலால் காப்பி சீக்கிரம் ஆக வேண்டுமென்ற கருத்துடன் தம்தம்வேலைகளைக் கவனிக்கலாயினர். மாப்பிளையும் இன்னும் கொஞ்ச நேரத்தில் மங்கை சுந்தரியை மாலையிட்டு மகிழ்வேமென்ற ஆவலோடு காலையில் எழுந்தவுடன் தமது செயற்கைப் பற்களைக் கழட்டி சுத்தம் செய்து கொண்டிருந்தார். அத்தருணம் அங்கு ஓர் உக்குரலாய் 'ஐயோ' பெண்ணைக் காணுமே, பெண்ணைக்காணேமே என்ற சத்தம் கேட்கவும் அமரசிங்கம் பிரபு ஒன்றும் தோன்றுதவராய் கழட்டிய பல்வரிசையை அப்படியே போட்டுவிட்டு எப்பொழுதும் தனது வெள்ளை ரோமங்களுக்குப் பூசும் தைலத்தையும் பூசாமல் ஓடோடியும் வந்து "என்ன, என்ன" என்றார். பெண்வீட்டார் இறங்கியிருந்த ஜாகையில் பித்தர்கள்போல கையில் கடிதம் ஒன்று வைத்துக்கொண்டு கலங்கி நின்ற சோமசுந்தரம் "ஐயோ என்செய்வேன்! அருமைச் செல்வி போய்விட்டாளே! எங்கு சென்றாளோ, என்ன வானாளோ! மாப்பிளை பிரபுவைக் கூப்பிடுங்கள்" என்றார். அப்போது தன் பொக்கை வாயைத்திறந்து 'நான்தான் இதோ நிற்கிறேனே. விஷயமென்ன? எப்படி நடந்தது' என்றார். அமரசிங்கம் பிரபு ஐயோ! உங்கள் பல்வரிசைகளும் ரோமமும் எனது உணர்வும் மாறியிருப்பதால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. இரவு படுக்கைக்குச் சென்ற எனது செல்வி, ஏழு மணியாகியும் எழுந்து வாராததால் படுக்கை அறையைத்திறந்தேன். அதில் இச்சிறிய கடிதந்தான் தென்பட்டது. பாருங்கள் என்று கடிதத்தைக் கொடுத்தார் சோமசுந்தரம். மாப்பிளை கடிதத்தை வாங்கிப் படித்தார். அக்கடிதம் பின்வருமாறு.

அன்புள்ள தந்தையே! நமஸ்காரம் என்னை வளர்த்துக் காப்பாற்றிய தங்கள்

(12-ம் பக்கம் பார்க்க)

## ஏசு கிறிஸ்துவின் ஆடை.

### ஜெர்மனியில் காட்சி.

உலகிலேயே மகா அற்புதமானதும், தெய்வீகமாகக் கொண்டாடப்படுவதும் ஏசு கிறிஸ்துவின் ஆடையேயாகும். ஏசு கிறிஸ்துவை சிலுவையில் அறைந்து கொல்லுவதற்கு முன் அவர் அணிந்திருந்த ஆடையை ஜெர்மனியிலுள்ள டிரையர் நகரின், கத்தோலிக்கர் ஆலயத்தில் இன்னமும் பரிசுத்தமாக வைத்துக் காப்பாற்றி வருகிறார்கள். இந்த ஆடையை 50 வருடங்களுக்கு ஒரு முறை பொது ஜனங்களுக்குத் திறந்து காட்டுவது வழக்கம். அதன்படி கத்தோலிக்கக் கிறிஸ்துவர்களின் இந்த பரிசுத்த வருடத்தில், டிரையரிலுள்ள கிறிஸ்துவின் அற்புத ஆடையை பொது ஜனங்களுக்கு திறந்து காட்டத் தீர்மானித்திருக்கிறார்கள். இக்காட்சி இன்னும் மூன்று மாதங்களில் ஆரம்பமாகும்.

இந்த ஆடையையே கிறிஸ்துவை சிலுவையில் அறைந்து கொல்வதற்கு முன் ஏசு கிறிஸ்து அணிந்திருந்தாரெனத் தெரிகிறது. இதையே யூத சோல்ஜர்கள் ஆவேசத்தில் கிழித்தெறிந்து கிறிஸ்துவை அவமானப் படுத்தினார்கள். இதே ஆடையே எத்தனையோ பேர்களைக் குணப்படுத்தியிருக்கிறது. கிறிஸ்து உயிருடனிருந்த காலத்தில் இந்த ஆடையைத் தொட்ட மாத்திரத்தில் குணமடைந்தவர்கள் பலர். தீராத நோய்களும் குணமடைந்தது. சுமார் 42 வருடங்களுக்கு முன் இந்தஆடையைத் திறந்து காட்டினார்கள். இவ்வருடமும் இதைத்திறந்துவைக்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

### 6 வாரக் காட்சி.

கிறிஸ்துவின் ஆடை ஒரு சரித்திர சம்பந்தமான பெரிய காட்சியாகும். சென்ற 400 வருடங்களில் இதை 5 முறையே பொதுஜனங்களுக்குத் திறந்து காட்டியிருக்கிறார்கள். இவ்வருடம் ஜூலை மாதம் 23-ந்தேதி அந்த ஆடையை பொதுஜனப் பார்வைக்கு வைப்பார்கள். செப்டம்பர் மாதம் 3ந்தேதி வரையில் அக்காட்சி நடைபெறும். இதை 6 வாரங்கள் சுமார் 2000000 ஜனங்கள் உலக மெத்திசையிலுமிருந்து அந்நகருக்கு யாத்திரை செய்வார்களெனத் தெரிகிறது. அயர்லாந்து, இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய இடங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் ஜெர்மனிக்கு வருவார்களாதலால், அக்காலத்தில் யாத்ரீகர்கள் வசதிகளைக் கவனிக்க ஜெர்மன் ரயில்வே அதிகாரிகள் இப்பொழுதே வசதியான ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்.

### 5 அடி உயரம்.

கிறிஸ்துவின் ஆடை சுமார் 5 அடி உயரமிருக்கிறது. ஆடையின் அகலம் சுமார் 40 முதல் 28 அங்குலமிருக்கும். அக்காலத்தில் அதாவது 1330ம் ஆண்டு முதல் இந்த பரிசுத்த ஆடையை இந்நகரில் வெகுபக்தியாகவும், பத்திரமாகவும் காப்பாற்றி வருகிறார்கள். இந்தஆடையை முதன்முதலில் 1522ம் வருடம் பொது ஜனங்களுக்குத் திறந்துகாட்டினார்கள். அக்காலத்திலுங்கூட உலகின் பல பாகங்களிலிருக்கும் சுமார் 1000000 ஜனங்கள் அந்த ஆடையைகண்டு களிக்கச்சென்றார்கள். சுமார் 14 தினங்களுக்கு அது காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. அதன்பின் 1810ம் வருடமும், 1844ம் வருடமும், மீண்டும் பொது ஜனங்களுக்கு காட்டினார்கள். இக்காலத்தில் அந்த ஆடையை கண்மாத்திரத்தில் பலநோயாளிகள் குணமானார்கள். இவர்களில் பல தீராதநோய் பிடித்தவர்கள், பூரணமையாகக் குணமானதைப் பேர் பெற்ற ஜர்மன் டாக்டர்கள் பரிசோதித்தது அது புதுமையே யென்பதை ஒப்புக்கொண்டனர்.

### அற்புத புதுமைகள்.

இறுதியாக 1891ம் வருடம் இந்தஆடையைக் காட்சிக்கு வைத்தார்கள். அக்காலத்திலும் பலர் ஆச்சரியமாகக் குணமடைந்தார்கள். இக்காலத்தில் சுமார் 20 லக்ஷம் ஜனங்கள் வந்திருந்தார்கள். அந்தக்காட்சிக்கு முன் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தபோதே பலர் அற்புதமாகக் குணமடைந்தார்கள். பலர் கோரிய காரியங்கள் சித்தியாயின

——

## சைகோன் தொல்லை.

பிரெஞ்சு கவர்ன்மெண்டார் வருந்தி அழைத்ததன்மேல் இண்டோ—சைனாவுக்குச் சென்று அந்தத்தேசத்தின் அபிவிருத்திக்காக தேச விசேஷ உதவியைச் செய்துவந்திருக்கும் தனவைசிய சமூகத்தினர் விஷயத்தில் அந்தத் தேசகவர்ன்மெண்டார் சமீபகலமாகக் காட்டிவரும் மனோபாவம் இந்தியா முழுவதும் திடுக்கிடும்படி செய்திருக்கிறது. அந்தச் சமூகத்தைச் சேர்ந்த நான்கு கனவான்களை அந்ததேச கவர்ன்மெண்டார் காடு கடத்திவிட்டதால் ஏற்பட்டிருந்த அதிர்ச்சி அடங்குவதற்கு முன் அவர்களுக்கு வரவேண்டிய கடன் தொகைகள் விஷயத்தில் அவர்கள் எவ்வித ஏற்பாட்டுக்கு இணங்க வேண்டுமென்று நீண்டகாலத் தவணைக்கடன் அதிகாரி ஒரு அறிக்கையை வெளியிட்டுவிட்டார். இந்த ஏற்பாட்டுக்கு மே மாதம் 22உக்குள் தனவைசிய சமூகத்தினர் இணங்கிவிட வேண்டுமென்றும், இல்லையேல் அவர்களுடைய கணக்குகளைப் பரிசோதனை செய்த சட்டப்படி நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் போவதாகவும் அவர் பயமுறுத்தியிருந்தார். விவசாயிகளுடைய கஷ்ட நிலைமையைப் பரிகரிப்பதற்காக அவர்களுக்குக் கடன் கொடுத்திருந்த அனைவர் விஷயத்திலும் ஒரே முறையை அந்தத்தேச கவர்ன்மெண்டார் கைக்கொள்ளுவதாக இருந்தால் அது விகாரத்திற்கேனும் நியாயமாக இருக்கும். ஆனால் விவசாயிகளுக்குக் கடன் கொடுத்துள்ள அனைவர் விஷயத்திலும் அவ்விதம் ஒரே விதமான முறையை அந்தத்தேச கவர்ன்மெண்டார் கைக்கொள்ளவில்லை. ஆகவே இது இந்தியர்களிடத்தில் மட்டில் வேற்றுமையைக் காட்டுவதாக இருக்கிறது. அத்துடன் அந்த அதிகாரி குறிப்பிட்டுள்ள நிபந்தனைகளும் தனவைசிய சமூகத்தைச் சேர்ந்தவர்களை வெகுவாகப் பாதிக்கக்கூடியவைகளாக இருக்கின்றன. இந்த நிபந்தனைகளைத் தனவைசிய சமூகத்தினர் ஏற்றுக் கொள்வதெனில் கோடிக்கணக்கான தொகையை அவர்கள் இழந்துவிட வேண்டிவரும். ஆயினும் அவர்கள் பாங்கிகளிலோ வேறிடங்களிலோ இந்தத் தொழிலுக்காக வாங்கியிருக்கும் கடன் விஷயத்தில் எவ்வித பரிகாரமும் அவர்களுக்குக் கிடைக்காது. இவ்வித நிலைமையில் அவர்கள் இந்த ஏற்பாட்டுக்கு இணங்குவது சாத்தியமில்லை. லண்டனுக்குச் சென்றுள்ள ஸ்ரீமான் ஏ. ராமசாமி முதலியாரும், மேன்மை தங்கிய ஆகாகானும் பிரெஞ்சு குடியேற்ற நாட்டு மந்திரியை பாரிஸில் பேட்டி கண்டு பேசியதாகவும், முன்னவர் பிறகுபிரெஞ்சுப் பார்லிமெண்டு சபை அங்கத்தினர்களையும், அந்த தேசத்தின் பிரதம மந்திரியையும், குடியேற்ற நாட்டுமெந்திரி காரியாலயத்தின்கிழ்ந்தர உத்தியோகஸ்தரையும் பேட்டிகண்டு இண்டோ-சைனாகவர்மெண்டார் எடுத்துக் கொண்டுள்ள நடவடிக்கையின் அநீதத்தன்மையை அவர்களுக்கு எடுத்துக் காட்டியதாகவும், அந்தக் கவர்மெண்டார் எடுத்துக்கொள்ள நடவடிக்கை சரியானதில்லையென்பதை அங்குள்ளோர் அனைவரும் ஒப்புக்கொண்டதாகவும் "நியூடைம்ஸ்" பத்திரிகைக்கு ஒரு செய்தி கிடைத்தது. அந்தச் செய்தியில் இண்டோ-சைனா கவர்ன்மெண்டின் அதீனமான இந்த உத்தரவுக்கு தனவைசிய சமூகத்தினர் இணங்கவேண்டியதில்லை யென்று யோசனை சொல்லப்பட்டிருந்தது. இன்று ஸிம்லா நிருபரிடமிருந்து நமக்குக் கிடைத்திருக்கும் செய்தியிலிருந்து இண்டோ-சைனா கவர்மெண்டு பூரண சுவாதீன முடையதாதலால் பிரெஞ்சு கவர்மெண்டார் இவ்விஷயத்தில் தலையிடக்கூடுமோவென்ற சந்தேகம் இருந்து வருவதாக ஊகிக்கவேண்டிய வருகிறது. இண்டோ-சைனா கவர்மெண்டு பூரண சுயேச்சை யுடையதாயினும், அத்தேசத்தில் பிரெஞ்சு கவர்மெண்டின் வேண்டுகோளின் மேல் குடியேறிய அந்நாட்டினராகிய இந்திய தனவைசிய சமூகத்தினர் விஷயத்தில் அந்தத்தேச கவர்மெண்டார் வேற்றுமையான முறையைக் கையாளுவதைத் தடுப்பதற்குப் அந்தக் கவர்ன்மெண்டுக்கு அதிகாரமில்லாமலிருக்குமென்று நாம் நினைக்க முடியவில்லை. இந்தியா கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தில் மிகுந்த சிரத்தை எடுத்துக்கொண்டிருப்பதாகவும், ஏற்கெனவே அவர்கள் தங்களாலியன்ற காரியங்களைச் செய்திருப்பதாகவும்

இனியும் அவசியமான நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளச் சித்தமாக விருப்பதாகவும் நமது நிருபர் தந்தியிலிருந்து தெரிகிறது. அவர்கள் ஏற்கனவே எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளினால் எவ்வித பலனுமேற்பட்டிருப்பதாக இதுவரை நமக்குத் தெரியவில்லை. அவர்கள் இருந்து வரும் நிலைமை காரணமாக நேர்முகமாகப் பிரெஞ்சுக் கவர்ன்மெண்டுடன் தந்தி அல்லது கடிதப் போக்குவரத்தை நடத்த முடியாவிடினும், பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இவ்விஷயத்தில் அதிகம் முனைந்து, இந்தியர்களுக்குப் பரிகாரந் தேடிக் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்துவது அவர்கள் கடமையாகும். பிரிட்டிஷ் பிரஜைகளுக்கு உலகின் எத்தேசத்திலும் விசேஷ உரிமையிருந்து வருகிறதென்றும், அந்த உரிமையைச் சிறிதும் விட்டுக்கொடுத்து விடப்போவதில்லையென்றும் பிரிட்டிஷ் அந்நிய நாட்டு மந்திரியான ஸர் ஜான் ஸைமன் சமீபத்தில் பார்லிமெண்டில் சொல்லிக்கொண்டார். அவ்வித உரிமைகளைப் பாதுகாப்பதற்கெனவே ருஷிய கவர்ன்மெண்டார் அந்த தேசத்திலிருந்த சில ஆங்கிலேயர்கள் மீது குற்றம் சாட்டியும் அவர்களை விசாரணையின்றியே விடுவித்து விடும்படி நிர்ப்பந்திக்க ஆரம்பித்தார்கள். அதற்கு அந்தத் தேசகவர்ன்மெண்டார் மதியாமற்போகவே அவர்களுடன் இருந்துவந்த வியாபார சம்பந்தத்தை முறித்துக்கொண்டார்கள். குற்றம் சாட்டப்பட்டவர்கள் விஷயத்திலேயே இவ்விதம் நடவடிக்கையை எடுத்துக்கொண்ட பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் நிரபராதிகளான தனவைசிய சமூகத்தினருக்குப் பிரத்தியேக உரிமைகளை சம்பாதித்துக் கொடுக்காவிட்டாலும் அவர்களுடைய கிரமமான உரிமைகளையேனும் பாதுகாப்பதற்கு அவசியமான நடவடிக்கைகளைக் காலதாமத மன்னியில் எடுத்துக் கொள்ளக்கடமைப்பட்டிருக்கிறார்கள். இதுவரையில் அவர்கள் அவ்விதம் தீவிரமாகச் செய்யாததே இந்தியாவில் மிகுந்த தப்பபிப்பிராயத்திற்கு இடங்கொடுக்கிறது. அது அதிகரிப்பதற்கு இடமில்லாத வழியில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியவர்களுடைய கடமையாகும்.

(சுதேசமித்திரன்)

——

பிரேக்நகரத்திலுள்ள ஜனன மரணக் கணக்கு நிபுணர் ஒருவர், "ஒரு மனிதன் A. D. முதல் வருடம் வரையில் தன் பரம்பரையிலுள்ளவர்களைக் கணக்கிட்டுப் பார்ப்பானுயின் 10 லட்சம் கோடியே கோடிப் பேரிருந்திருப்பதாகக் காண்பான்" என்கின்றார்.

0 0 0

குடியை ஒழிக்கக்கூடிய கண்டிப்பான சட்டம் ஆப்கானில் தானத்தில்தா னிருக்கிறது. உலகிலேயே வேறு எந்நாட்டிலும் அவ்வித சட்டம்கிடையாது. அங்கு எவரிடமேனும் குடிவகைகளிருக்கக்கண்டால் அவருக்கு 6 வருடம் சிறைதண்டனை விதித்து, உடனே சிறைக்கு அனுப்பிவிடுவார்கள்.







## மலாக்கா செட்டியார்கள் வர்த்தக சங்கம்.

### பிரிவு உபசார விருந்து.

மலாக்கா, ஜூன் 2

இன்று மாலை மணி 4க்கு இச்சங்கத்தின் கௌரவ காரியதரிசியாயிருந்து அருந்தொண்டாற்றிய திரு. உ. அரு. அருணாசலம் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டு அன்னவர்களுக்கு பொய்யாத விநாயகர் கோவில் கட்டிடத்தில் சங்கத்தலைவர் பி. கு. நா. ராமசாமி செட்டியாரவர்கள் அக்கிராசனத்தின் கீழ் ஒரு பிரிவுபசார விருந்து நடத்தப்பெற்றது. விருந்து முடிந்ததும் தலைவர் அவர்களால் திரு. அருணாசலஞ் செட்டியாரவர்களுக்கு மாலையணிவிக்கப்பெற்று, முன்னுரையாக நமது சங்கம் தோன்றுவதற்கு முக்கிய காரண பூதராயிருந்தவரும் அதில் பிரதானமான காரியதரிசிப் பதவியை ஏற்றுப் பொறுப்புடன் நிர்வகித்து நடத்தி வந்தவருமான திரு. உ. அரு. அருணாசலம் செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதால் அன்னவருக்கு ஓர் உபசார விருந்து நடத்தி அவரிடம் நாம் கொண்டிருக்கும் அன்பை விளக்கி நமது நன்றியறிதலைத் தெரிவிப்பதற்காகவே இங்கு கூடியிருக்கின்றோமென்றும், அன்னவர் பொதுவாக நமது தேசத்திற்கும் சிறப்பாக நமது சமூகத்திற்கும் மிகவும் அருந்தொண்டாற்றியிருக்கிறாரென்றும், அவரின் பிரயாணம் இனிது முடிந்து அவருக்கு திடகாத்திரத்தையும் நீண்ட ஆயுளையும் குறையாத செல்வத்தையு மளிக்குமாறு எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமென்றும் கூறி ஆசனத்தமர்ந்ததும் உபதலைவர் ப. சி. கா. நாகப்பசெட்டியாரவர்கள் எழுந்து அருணாசலஞ் செட்டியாரவர்களின் தொண்டுகளைப் பாராட்டி அன்னவர்களின் பிரிவு நமது சங்கத்திற்கும் நமது சமூகத்திற்கும் ஓர் ஆற்றொணாப் பிரிவென்பதில் சந்தேகமில்லையென்றும், அவர்கள் சுகமே தாய்நாடு சென்று கூடிய விரைவில் இங்குவந்து இச்சங்கத்திற்கும் நமது சமூகத்திற்கும் தொண்டாற்றும்படி கேட்டுக் கொள்கிறேன் என்றும் பேசிமுடித்தார்கள். அடுத்தபடியாக திரு. ராம. அள. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் முக்கிய விருந்தினரின் நற்குணங்களையும் அவர் செயலாற்றும் திறமைகளையும் நாட்டுக்கும் சமூகத்திற்கும் அவர் செய்யும் தொண்டுகளையும், குறிப்பாக இச்சங்கத்திற்கு அவர்கள் செய்திருக்கும் அரிய வேலைகளையும் மிக விரிவாக எடுத்துக்கூறியதுடன், அவர் பிரயாணம் இனிது முடிந்து தாய்நாட்டு வேலைகளை முடித்துக்கொண்டு திரும்ப இந்நாடு வரும்பொழுது அவரின் வாழ்க்கைத் துணைவியாரையும் உடனழைத்து வந்து இன்னும் பல மேலான பதவிகளையும் வகித்து நமது தேசத்திற்கும் சமூகத்திற்கும் தொண்டாற்றும்படி கேட்டுக் கொள்கிறேனென்றும் பேசி முடித்தார்கள். அப்பால் பிரதம விருந்தினரான திரு. உ. அரு. அருணாசலஞ் செட்டியாரவர்கள் எழுந்து பதில் கூறிய பொழுது என்னை மூவர்களும் உயர்த்தி அதிக தொண்டு செய்தவனென்று கூறியதாவது அவர்கள் உள்ளத்தில் எனது பால் கொண்டிருக்கும் அன்பே காரணமென்றும், ஒருவரை சமூகத்தார் புகழவோ தேசத்தார் போற்றவோ வேண்டுமானால் அவர் தன் சொந்த வேலைகளையெல்லாம் ஓர்பால் ஒதுக்கிவைத்து சமூகத் தொண்டிலும் தேசத்தொண்டிலும் மூழ்ந்து நின்று உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்யவேண்டுமென்றும் அதற்கு நான் அருகனல்லவென்றும், இச்சங்க ஸ்தாபனத்திற்கு நான் மாத்திரம் காரணஸ்தனல்லவென்றும், இவ்வூரில் நம்மவர்களுக்கென ஒரு சங்கமில்லையென்ற குறையை நிவர்த்திக்கும் பொருட்டு உணர்ச்சியுள்ள பலரின் தூண்டுதலாலும் அவர்களின் முயற்சியாலும் இச்சங்கம் ஆரம்பத்தில் வாசக சாலையாகவே ஆரம்பிக்கப்பட்டதென்றும், அப்பால் நகரத்தார்களும் சங்கத்தினால் பல நன்மைகளுண்டென்பதை யுணர்ந்து வாசகசாலையை சங்கமாக மாற்றும்படிவேண்டி அதற்குவேண்டிய உதவிகளையும் செய்து எல்லாருடைய ஒத்துழைப்பையும் பெற்று இச்சங்கம் ஸ்தாபனஞ் செய்யப்பெற்றதேயொழிய தன்னால் மட்டும் இக்காரியம் ஆனதாகச் சொல்ல முடியாதென்றும் இப்போது நமது சங்கம் பெற்றிருக்கும் தலைவர் உபதலைவர் மற்ற நிர்வாக உத்தியோகஸ்தர்களால் நமது சங்கமானது பலவிதமானதொண்டுகளைச் செய்து நன்னிலைமையிலிருக்குமென்று தாம் நம்புவதாகவும் மற்ற யாவர்களும் எப்பொழுதும் ஒத்துழைத்து நமது சங்கத்தை முன்னுக்குக் கொண்டுவரவா முயற்சி எடுத்துக்கொள்ளும்படி எல்லோரையும் வேண்டிக்கொள்கிறேனென்றும், மிக விரிவாகவும் தெளிவாகவும் உணர்ச்சி ததும்பப் பேசியதோடு, நண்பர் சிதம்பரஞ் செட்டியாரவர்கள் என்னை இந்நாடு திரும்பும்போது எனது வாழ்க்கைத் துணைவியாரையும் உடனழைத்துக் கொண்டுவர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்கள். அதற்கு நான் தற்சமயம் நிச்சயமான முடிகூவுற முடியாதவனாயிருக்கிறேனென்றும், கூடியவரை முயன்று இணங்குமானால் நிச்சயமாய்க் கூட்டி வருவேனென்றும் சொல்லிஆசனத்தமர்ந்தார்கள். முடிவாக தலைவரவர்கள் முடிவுரை கூற உபகாரியதரிசி திரு. ராம. சித. நல்லகருப்பன் செட்டியாரவர்களால் வந்தனோபசாரம் சொல்லப்பெற்று மணி 6-15க்கு கூட்டம் முடிவெய்தியதென உபகாரியதரிசி திரு. ராம. சித. நல்லகருப்பன் செட்டியார் தெரிவிக்கிறார்.

## லாட்டரிகளைப்பற்றி ராயல் கமிஷன்.

லண்டன், ஜூன் 9...

லாட்டரிகள் பந்தயங்களுக்குப் பணங்கட்டுதல் முதலியவற்றைக் குறித்த கமிஷனின் முடிவான யாதாஸ்து இன்று வெளியாகிவிட்டது. கமிஷனர்கள் கூறுவது:— தனிப்பட்டவர்களின் சூதாட்டத்தில் தலையிடவேண்டியது அனாவசியம். கட்டுப்பாடான சூதாட்ட வசதிகளால் சமூகத்துக்கு ஆபத்தான நிலைமை ஏற்படும் சந்தர்ப்பங்களில் அவைகளைத் தடுக்கவோ அல்லது அவ்விஷயத்தில் நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தவோ வேண்டும். லாட்டரிகள், பந்தயம், சூதாட்டம், இவை சம்பந்தமாக இப்போதுள்ள சட்டங்கள் திருத்தப்பட்டு ஒரே சட்டமாக ஒழுங்குப் படுத்தப்படவேண்டும். 17 வயதுக்குக் கீழ்ப்பட்டவர்களிடம் பந்தயங்களுக்குப் பணம் வாங்கக்கூடாது. பந்தயம் பேசுபவர்கள் (புக்மேக்கர்கள்) பந்தய ஸ்தலத்திலும் சரி, வெளியிலும் சரி, பதிவுசெய்யப்பட்டவர்களாகஇருக்கவேண்டும். பெரிய லாட்டரிகள் இனிமேலும் அதிகமாக பிரிட்டனில் நடக்கவிடக்கூடாது; இவ்வாறு செய்தால்தான் இதர தேசலாட்டரிகளுக்கு டிக்கட் விற்பனை நடப்பதைத்தடுக்க இது உதவியாயிருக்கும். ஒரு சமயம் லாட்டரிகள் நடத்த அநுமதிப்பதாயிருந்தால், சர்க்கார் பொக்கிஷத்துக்கு ஆதாயமாயிருக்கும்படி ராஜாங்கத்தாரே லாட்டரி நடத்துவது அவ்வளவு ஆட்சேபகரமாயிராது.

——

### ஹிருதயத்தில் 10 தையல்.

சிக்காகோவில் நடந்த ஒரு சண்டையின் போது ஒரு நீக்ரோவின் ஹிருதயத்தில் 1¼ அங்குலம் நீளமுள்ள காயமேற்பட்டது. ஒரு டாக்டர் நல்லசமயத்தில் அவருடைய ஹிருதயத்தில்பத்து தையல்கள்போட்டார்.

ராவபகதூர் க. வீ. அழ. ராமநாதன் செட்டியாரவர்கள். மன்னர் பிறந்தநாளன்று "ராவ்பகதூர்" பட்டம் அளிக்கப்பெற்று கௌரவிக்கப்பட்டிருக்கிறார்.

## காரைக்குடி கதர் சுதேசி பொருட்காட்சி

### வாயில் கட்டணத்தை எடுக்க பொதுஜன வேண்டுகோள்

செட்டிமார் நாட்டுகதர் சுதேசிப் பொருட்காட்சி யென்ற பெயரோடு காரைக்குடி எஸ். எம். எஸ். வித்தியாசாலையில் நடைபெறும் பொருட்காட்சியின் குறைப்பாடுகளை கண்டிக்கும் பொருட்டு ஜூன் 10-ந்தேதி மாலை 7-மணிக்கு மகர்நோன்பு பொட்டலில் உள்ளூர் உண்மை நாடுவோர் சங்கச் சார்பில் ஓர் பொதுக்கூட்டம்நடைபெற்றது. அதில்தோழர் முரு. அருணாசலம் செட்டியாரவர்கள் தலைமைதாங்கினார்கள். தோழர்களான அரு. சோமசுந்தரம் செட்டியார் பழ. நாராயணன்செட்டியார் தி. ம. நடராஜன். இ. சிவம் ஆகியோர் வாயில் கட்டணம் வைத்திருப்பதுபிரஸ்தாபப் பொருட் காட்சியைப் போன்ற ஒரு சிறிய அமைப்பிற்குத்தகுந்ததல்லவென்றும், அவ்வாறு கட்டணம் வசூலிப்பது ஏராளமான ஜனங்கள் வந்து பார்வையிடுவதற்குத் தடையாயிருக்குமென்றும், பொதுஜனங்கள் பலர் சொல்லியும், ஆங்காங்கே அபிப்பிராயத்தைத் தெரிவித்தும் காட்சியை நடாத்தும் கதர் இன்ஸ்பெக்டர்பிடிவாதமாயிருந்து பொது ஜனங்களை அலட்சியம் செய்வது கண்டிக்கத்தக்கதாகுமென்றும், ஜீவாதாரமான கைத்தொழிற் பொட்களும் அபூர்வ காட்சி சாமான்களுமின்றி சாதாரண பற்பொடி, லிம்டோ, லின்சண்டுசோடா, சிகரட், காபி. பொடி, வெற்றிலை பாக்கு, லேகியம், தைலம், செண்டு, சோப்பு, ரேடியோ. முதலிய பொருட்களுடன் கதரையும் சேர்த்து சுதேசிப் பொருட்காட்சி என்று நடத்துவது தகுதியல்ல வென்றும், கதர் வாரம் அல்லது கதர் காட்சி என்ற பெயரோடு கதருக்கு முக்கியம் கொடுத்திருந்தால் நலமாயிருக்கும் என்றும் சிறியகாட்சியை வீண் ஆடம்பரம் செய்து பெரிதாக்காது கதர் மட்டிலும் (தற்போதுள்ள நிலைமையில்) விற்பனை செய்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்என்றும்கூறினார்கள். அதுபோது தந்த வைத்தியரான டாக்டர் வர்க்கிஸ் அவர்கள் சமாதானமானமுறையில் சிலவார்த்தைகள்பேசிக் கண்காட்சித் தலைவரவர்களிடம் கூட்டத்தில் குறிப்பிடப்பட்டவாறு கட்டண விஷயம் தெரியப்படுத்தி யிருக்கப்பட வேண்டுமென்று கூறினார். அதற்குப் பதிலாக, தலைவரைக் கலந்துபேச இருஅன்பர்கள் அனுப்பப்பட்டனர் என்றும் அதற்கு முன்னுடியே பன்முறை உள்ளூர் கதர்ஸ்டோர் மானேஜர் மூலம் செய்து அனுப்பப்பட்டது என்றும் சொல்லப் பட்டது. திரு வர்க்கிசு தாம் கூட்டத்தின் கருத்தை தலைவரிடம் எடுத்துக்கூறி கட்டணத்தை நீக்கிவிடுவதாக ஒப்புக்கொண்டார். அப்போது திரு. அப்துல்லா ராவுத்தர் எழுந்திருந்து தாம் கண்காட்சிக்குச் செய்த ஊழியத்தை விரித்துக் கூறி, கட்டணம் பிரஸ்தாப கண்காட்சிக்கு தகுதியில்லை யென்றும், சிறியகாட்சியைப் பெரிதாக ஆடம்பரம்செய்து காண்பிப்பது தப்பிதமென்றும், காட்சியில் ஒருவருடைய சர்வாதிகாரம் காணப்படுவது கண்டிக்கத்தக்கதென்றும், பொதுஜனங்களுடைய வேண்டுதலை அலட்சியம் செய்வது அழகல்லவென்றும் ஆவேசமாகப் பேசினார். பிறகு சுமார் 9-15-க்கு கூட்டம் முடிவுற்றது. —நிருபர்.

## பனையப்பட்டி.

(புதுக்கோட்டை)

ஷண்முக ஜயந்தி உத்ஸவம்:—இவ்வூரில் திருவாளர் மு. ரா. மு. இராமன் செட்டியாரவர்களால் தமது சாதுக்கள் மடத்தில் ஷண்முக ஜயந்தியை முன்னிட்டு மூன்று தினம் வரை சுமார் 200 சாதுக்களுக்கு அன்னதானம் செய்து விசாகத்தன்று அவ்வளவு பேருக்கும் கோடி வஸ்திரம் கொடுத்து அன்றுஇரவு வெள்ளி மயில் வாகனத்தில் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளுக்கு மணியணிகளாலும் மலர்மாலைகளாலும் அலங்காரம் செய்து எழுந்தருளச் செய்தார்கள். அதற்கு உயர்ந்த மேளம், பியாண்டு, திருப்புகழ் கோஷ்டி முதலியவைகளைத் தருவித்துச் சிறப்புச் செய்தார்கள். இவ்விழாவிற்கு மதுரை ஸ்ரீ யோகானந்த சுவாமி அவர்கள் அவர்களது ஆச்சிரமத்திலுள்ளவர்கள் தனவைசியச் செல்வர் முதலிய பலர்வந்து சிறப்பித்தார்கள். ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளால் சாது சங்க மகிமையென்ற விஷயமாக பிரசங்கமும் ஸ்ரீ சிவயோகி நடராசரால் நடனமும் நடைபெற்றது. இவ்வளவு உத்தமமான தருமங்களை நடத்திவரும் ஸ்ரீமாந் செட்டியாரவர்கள் எல்லா நன்மையும் பெற்று வாழ்வார்களாக.

—ஒரு நிருபர்.

## கப்பற் செய்தி

கப்பல்கள நாகப்பட்டினத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| கப்பல் பெயர் | புறப்படுந்தேதி |
|---|---|
| ரஜுலா | 24—6—33 |
| ரோனு | 8—7—33 |
| ரஜுலா | 22—7—33 |

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டினத்துக்கு வரும் விவரம்

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ரஜுலா | 14—6—33 |
| ரோனு | 28—6—33 |
| ரஜுலா | 12—7—33 |

ரங்கூனுக்கு வெள்ளிக்கிழமைதோறும் சென்னையிலிருந்து கப்பல் புறப்படுகிறது.

## ரயில் வண்டி போக்குவரவு.

### திருச்சி—மானமதுரை.

| | | 25 நிர் பாசஞ் | 1 நிர் மெயில் | 27 நிர் பாசஞ் | 29 நிர் பாசஞ் | 33 நிர் மிக்சட் | 31 நிர் பாசஞ் | தனுஷ் எக்ஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி ஜங் | புறப் | 3-50 | 7-45 | 11-0 | 13.25 | ........ | 17-20 | 21-54 |
| காரைக்குடி | வரும் | 6-24 | 10-10 | 13-37 | 16-13 | ........ | 20-5 | 0-25 |
| | புறப் | 6-30 | 10-20 | ........ | 16-35 | 17-35 | ........ | 0-33 |
| மானமது | வரும் | 8-18 | 12-6 | ........ | 18-30 | 20-15 | ........ | 2-15 |
| | புறப் | 9-30 | 12-26 | ........ | 18-40 | ........ | ........ | 2-29 |

### மதுரை—மானமதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மதுரை | புறப் | 0—30 | 8—0 | 10—54 | 16—35 | 18—5 |
| மானமதுரை | சேர் | 2-4 | 9—20 | 12—2 | 17—52 | 19—50 |

### மானமதுரை—திருச்சி.

| | | 32 நிர் பாசஞ் | 30 நிர் மிக்ஸட் | 34 நிர் பாசஞ் | 2 நிர் மெயில் | 26 நிர் பாசஞ் | தனுஷ் எக் |
|---|---|---|---|---|---|---|---|
| மானமதுரை | புறப் | .... | 5-55 | 9-35 | 14-46 | 18-6 | 22-42 |
| காரைக்குடி | வரும் | .... | 8-39 | 11-31 | 16-28 | 19-54 | 0-27 |
| | புறப் | 6-45 | 8-53 | 11-40 | 16-34 | 20-7 | 0-36 |
| புதுக்கோட்டை | வரும் | 8-3 | 10-11 | 13-1 | 17-43 | 21-17 | 1-44 |
| திருச்சி (ஜங்) | வரும் | 9-37 | 11-43 | 14-38 | 18-55 | 22-41 | 3-2 |

### மானமதுரை—மதுரை.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மானமதுரை | புறப் | 5-0 | 8—29 | 14—43 | 18—40 | 22—45 |
| மதுரை | சேர் | 6-40 | 9-55 | 15—55 | 20—5 | 0-5 |

## கணக்கு வேலைக்கு ஆள்தேவை

இங்கிலீஷிலும் தமிழிலும் நல்ல பயிற்சியுள்ள ஆள்தேவை.

மானேஜர்
குமரன் ஆபீஸ்
காரைக்குடி.

குமரன்

காரைக்குடி
ஸ்ரீமுக ஹூ ஆனிமீ உ

## திருவாங்கூரில் கலைமகள் நடனம்.

திருவாங்கூர் சமஸ்தானம் கல்வியபிவிருத்திக்குப் பேர்பெற்றிருக்கிறது. இயற்கையாகவே திருவாங்கூர் ராஜ்யம் வளம் பொருந்திய நாடாகும். மலைவளமும் நீர்வளமும் நிலவளமும் பெற்ற அழகிய நாட்டிலுள்ள மக்களும் அழகுடையவர்களாக விளங்குகின்றனர். புற அழகுடன் அவர்கள் அக அழகும் பெற்று விளங்குவதே மகிழ்ச்சிக் குரியதாகும். உடலழகு எவ்வளவு சிறந்திருந்தாலும் கல்வியழகு பெறுவிடின் அவ்வழகிய உடலின் சிறப்பு மேம்படமுடியாது. பண்டைப்புலவர்கள் கலைமகள் நடம்புரியும் காட்சியைக் கண்டதாகக் கூறுகின்றனர். கலைகளின் தொகுப்பையே கலைமகளெனப் பழம்புலவர் கற்பனை செய்யலாயினர். அந்தக் கலைமகள் இன்று திருநடம் புரியுமிடம் திருவாங்கூர் ராஜ்ய எல்லையேயாமென்று கூறவேண்டியிருக்கிறது. திருவாங்கூர் அரசாங்கக் கல்வியிலாகா அறிக்கையொன்று சமீபத்தில் வெளியாகியிருக்கிறது. அதனைப்பார்க்கும் சீர்திருத்தவாதிகளும் கல்வியபிமானிகளும் உள நிறைந்த மகிழ்ச்சிப் பெருக்கடையாமலிருக்கமுடியாது. கல்வியபிவிருத்தி முறையும் பாராட்டத்தக்கதாயிருக்கிறது. உயர் ஜாதி ஆண்மக்களுக்கு மட்டுமே கல்வி கற்கும் பாத்தியமுண்டென்னும் குறுகிய கொள்கை அந்த ராஜ்யத்தில் கல்விக்கு விதை போட்ட நாளிலேயே ஒழிக்கப்பட்டிருக்கிறதென்பது ஊன்றிநோக்கத்தக்கதாகும்.

திருவாங்கூர் ராஜ்யத்தில் கல்விக்கு ஏற்பாடு செய்ய முதன்முதல் முயன்றவர் ராணி கௌரி பார்வதி பாய் ஆவர். இவர் இம்முயற்சியில் சுமார் 100 ஆண்டுகட்கு முன்னர் தலைப்பட்டார். சமஸ்தானத்திலுள்ள எல்லா ஜனங்கட்கும் கல்விபோதிக்கும் செலவை சமஸ்தானமே மேற்கொள்ளவேண்டுமென்று இவர் தீர்மானித்தார். தாழ்த்தப்பட்டவரென்று கருதக்கூடாதென்றும் கல்வி விருத்தியில் சமஸ்தானத்திற்குப் பெருமை மிகுமென்றும் அவர் கருதினார். அந்த அம்மையாரின் எண்ணம் இன்று காய்த்துக் கனிந்திருப்பது எண்ணி எண்ணி எல்லோரும் மகிழத்தக்கதன்றோ? இம்முயற்சியின் ஆரம்பமாக 1834ம் ஆண்டில் முதலாவது கவர்ன்மெண்டு ஆங்கிலப்பள்ளிக்கூடமும் 1863ம் ஆண்டில் முதலாவது பெண் பள்ளிக்கூடமும் ஏற்பட்டன. இதிலிருந்து மிக வேகமாக அபிவிருத்தியடைந்து வந்திருக்கிறது. இப்பொழுது அந்த சமஸ்தானத்தில் ஆண் பெண் ஆகிய இருபாலாரும் கல்வியில் மிக மேன்மையடைந்துவிட்டனர். கல்வி கற்பதென்பது மக்களுக்குரிய தொழில் என்ற அளவில் அங்குள்ள மக்களின் மனப்பான்மை ஏற்பட்டுவிட்டது. குழந்தை பிறந்து வளர்ந்து நாலைந்து வயதாகிவிட்டால பள்ளிக்கூடம் போவதென்பது ஒரு இயற்கை நியதியாகியிருக்கிறது. ஆண் ஆனாலும் பெண் ஆனாலும் கல்விச்சாலை செல்லவேண்டியது இன்றியமையாக் கடனென்று கருதப்படுகிறது. ஆண் மக்கள் எவ்வளவு படிக்கமுடிகிறதோ அதற்குக் குறையாமல் பெண் மக்களும் கற்று வருகின்றனர். தென்னாட்டுக்கு திருவாங்கூர் சமஸ்தானம் கல்விக் களஞ்சியமாக இருப்பது தென்னாட்டார் பெருமைப்படத்தக்கதோர் சந்தர்ப்பத்தை யளிக்கிறது.

திருவாங்கூர் சமஸ்தானத்தின் மொத்த ஜனத்தொகை சுமார் 48 லட்சம். இதில் இப்பொழுது பள்ளிக்கூடத்தில் படித்துவரும் பெண் குழந்தைகளின் தொகை 2,53,90? என்றால் எவ்வளவு தூரம் பெண்கல்வி முன்னேற்றமடைந்திருக்கிறதென்பதை உணரவேண்டும். ஏறக்குறைய பெண் குழந்தைகள் யாவும் பள்ளிக்கூடத்திலிருக்கின்றனவென்று இதிலிருந்து அறியலாம்.

செலவினத்தைப் பார்க்கும்போது அரசாங்கத்தார் சென்ற வருஷத்தில் 45 லட்சம் ரூபாய் நல்கியிருப்பதாகத் தெரிகிறது. அரசாங்கத்தாரால் நடத்தப்படாமல் மற்றவரால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்கள் மட்டும் 2443 என்று தெரிகிறது. இதனால் பொது ஜனங்களுக்கும் ஊக்கம் எவ்வளவென்பது புலனாகும். விஸ்தீரணத்தை நோக்கும்போது இரண்டு சதுர மைலுக்கு ஒரு பள்ளிக்கூடம் வீதம் திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஏற்பட்டிருக்கிறது. கல்விக்கு உரமளிக்கும் திருவாங்கூர் சமஸ்தானம் மற்ற வழிகளிலும் அபிவிருத்தியடைவதை விரைவில் எதிர்பார்க்கலாம். நூறு ஆண்டுகட்கு முன்னிருந்த ராணி கௌரிபார்வதி பாயின் மனத்தில் தோன்றிய கல்வியபிமானமும் அதை ஆண் பெண் உயர்ந்த ஜாதி தாழ்ந்த ஜாதி யென்ற வித்தியாசமின்றிப் பரப்ப வேண்டுமென்ற உயர்ந்த கருத்தும் சேர்ந்தே இந்தப் பலனை இன்று நல்கியிருக்கிறது.

## உள்ளூர்ச்செய்தி.

**ஓர் போதக்கூட்டம்:**—மகார்நோன்புப் பொட்டலில் 18—6—33 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு ஒரு பொதுக்கூட்டம் நடைபெறும். அதில் திருப்பத்தூர் தாலூகா போர்டார் 14 பள்ளிக்கூடங்கள் நிறுத்தி விட்டதைப்பற்றி யோசிக்கப்படும். மற்றைய பல விஷயங்களைப் பற்றியும் பேசப்படும்.

**பாங்கி திறப்புவிழா:**—11—6—33ந் தேதி இங்கு மரு. சு. கட்டட மேன்மாடியில் திருச்சி தென் இந்திய மெர்ச்செண்ட்ஸ் பாங்கியின் கிளையொன்று திறக்கப்பட்டது. முனிசிபல் சேர்மன் திவான்பகதூர் ஆவி. பழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் திறந்து வைத்தார்கள். அவர்களை திருப்பத்தூர் தாலூகா போர்டு வைஸ் பிரஸிடெண்டும், பிரஸ்தாப பாங்கியின் உபதலைவருமாகிய சி. மு. அரு. நாராயணன் செட்டியாரவர்கள் ஜரிகைமாலை சூட்டி வரவேற்றினார்கள். திறப்புவிழா தலைவருக்கு ஒரு உபசாரப் பத்திரமும் படித்தளிக்கப்பட்டது. அவர்கள்பாங்கின் உபயோகம் முதலியவற்றைப் பற்றிக் கூறித் திறந்து வைத்தார். பல கனவான்கள் திறப்பு விழாவிற்கு விஜயம் செய்திருந்தனர்.

**சாரைக்குடி ஹைஸ்கூல்:**—இந்த வருஷம் S. S. L. C. பரீக்ஷைக்குச் சென்ற மாணவர் தொகை 24. இதில் 13. பேர் தேர்ச்சியடைந்திருக்கிறார்களென்று தெரிகிறது.

## காந்திஜீ உடல் நிலை.

புனா, ஜூன், 14—

இன்று காந்திஜியின் உடல் நிலை, ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருந்தபடி பரீட்சிக்கப்படவில்லை. காரணம் எல்லா டாக்டர்களும் கூடி முடியவில்லையென்பதாம். ஆனால் டாக்டர் இல்டர் மட்டிலும் சோதனை செய்வார்,

இன்று காலையில் காந்திஜீ சந்தோஷமாகக் காணப்பட்டார். உண்ணாவிரதம் கைவிட்ட பிறகு இன்றுதான் முதன் முதலாக காந்திஜீ திறந்த வெளியில் (கட்டடத்தின் மேன்மாடியில்) வந்து சூரிய ஸ்நாநம் செய்தார் அப்போது மணி 10க்கு மேலிருக்கும், உஷ்ணத்தை சிறிது தணித்துக் கொள்வதற்காக காந்திஜீ ஓர் ஈரமானத் துணியைத் தலையைச் சுற்றிலும் கட்டியிருந்தார். ஸ்ரீமதி காந்தி பக்கத்தில் நின்று நான்கு புடவைகளைக் காண்பித்துக் கொண்டு நின்றார். இப்புடவைகள் ஸ்ரீமதி காந்தியால் 16ந் தேதி தன் புதல்வனுக்கு மணம் செய்யப்படப்போகும் ஸ்ரீமதி லக்ஷ்மிக்காக சேர்த்தெடுக்கப்பட்டவைகளாம்.

பிற்பால், காந்திஜீ ஆச்சிரமத்திலுள்ள ஒரு பெண்குழந்தையோடு பேசிக் கொண்டிருப்பதாய்க் காணப்பட்டது. அப்போது பால் கொணரப்பட்டது. காந்திஜீ அதனை கொஞ்சம் கொஞ்சமாகப் பருகினார். பட்டினியின் கொடுமை இன்னும் தெரிகிறது. தோள்பட்டைகள் ஒட்டிக்கொண்டிருக்கின்றன.

சூரிய ஸ்நாநத்திற்குப் பிறகு 11 மணிக்கு காந்திஜீ தன்னறைக்குட் புகுந்தார்.

## பொக்கிஷ மந்திரி அறிக்கை.

லண்டன்-வாஷிங்டன் சமாச்சாரப் போக்குவரத்தின் அசௌகரியம் காரணமாக யுத்தக் கடன் விஷயமாய் இன்று பார்லிமெண்டில் பொக்கிஷ மந்திரி ஸ்ரீ நெவில்சேம்பர்லேன் யாதொரு அறிக்கையும் வெளியிட முடியவில்லை. எனினும் பின்னர் அவ்விஷயமாய் அறிக்கை வெளியிடுவதாக அவர் கூறினார்.

## திரு. க. வெ. ராம. வெங்கடாசலம் செட்டியார் பிரிவு.

கானாடுகாத்தான் திருவாளர் க. வெ. ராம. வெங்கடாசலம் செட்டியாரவர்கள் ஆனிமீ 1உ காலையில் ஹிருதய நோயால் இவ்வுலக வாழ்வை விட்டுப் பிரிந்தார்கள். இப்போது வயது 55, நான்கு ஆண் மக்களும் ஐந்து பெண்மக்களுமிருக்கின்றனர். சாந்த குணமும் நல்ல சொபாவமும் உள்ளவர்கள். அவர்களுடைய பொய்மையில்லாத மனப்பண்பு யாவராலும் புகழப்படத்தக்கதாகும். உண்மையான பெரிய மனிதர். மதுரை, காளையார் கோவில் முதலிய இடங்களில் தேவாரப் பாடசாலை அமைத்திருக்கின்றனர். பல க்ஷேத்திரங்களில் நந்தவனங்களும் கொடிமுடியில் திருப்பணியும் செய்திருக்கிறார்கள். கானாடுகாத்தான் பெரியகோவில் திருப்பணி செய்து முடித்திருக்கிறார்கள், இந்தக் கோயில் நல்ல வசதியுடையதாகவும் ஊர் அமைப்பு மிகச் சிறந்த முறையிலும் அமைக்கப்பட்டுள்ளன.

## கொ லெட்சுமிபுரம்

திரு, மு. பழநியப்ப செட்டியாரவர்களின் தகப்பனார் ஜூன் 6உ காலஞ்சென்றார்கள். இவர்கட்கு வயது 74. ஒரு விநாயகாலயமும் சுத்த தீர்த்தடாகமும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இறந்த தினத்தன்று ஏழைகட்கு ஒருபடி நெல்லும் அரையணாவும் வழங்கப்பட்டது. சுமார் 400 ஏழைகள் இவ்வுதவி பெற்றனர்.

(ஒரு நிருபர்)

## திரு. வயிசு. ஷண்முகம்.

திரு. வயி. சு. ஷண்முகம் அவர்கள் சென்ற வியாழனன்று போட் மெயிலில் கானாடுகாத்தானுக்கு வந்து சேர்ந்தார்கள். அடுத்த நாள் வெள்ளியன்று காலை 9 மணி வண்டியில் மனைவியுடனும் பெண் குழந்தை பார்வதியுடனும் புறப்பட்டு மலாய் நாடு சென்றார்கள்.

## தேவகோட்டை.

**பொதுஜன மகஜர்:**—இன்றைய தினம் இவ்வூர் குடிகளும் மற்ற ஜனங்களும் கீழ்க்கண்டவாறு, இராமனாதபுரம் ஜில்லா சுகாதார ஆபீஸர் இராமனாதபுரம் ஜில்லா போர்டு தலைவர், திருவாடானை தாலூகா போர்டு தலைவர், இராமநாதபுரம் ஜில்லா கலக்டர் முதலியவர்களுக்கு ஒரு மகஜர் அனுப்பியிருக்கிறார்கள் அதன் கருத்து:—

இவ்வூர் அரு. லெ. வகையறாவால் வெகு காலமாய் ஏற்படுத்தப்பட்டிருக்கும் மார்க்கட்டு, காய்கறி, மீன், மீட் முதலியவைகள் வியாபாரத்துக்கு சௌகரியமாக இருப்பதால் அந்த மார்க்கட்டை எடுக்காமலிருக்கும்படிக்கும் வெள்ளையனூருணி சிலம்பனி ஊருணி, கருதா ஊருணி, இம்மூன்று ஊருணிகளின் ஜலமே இவ்வூரிலுள்ளோர்களுக்கு குடிப்பதற்கு உபயோகப்படுவதால் அவ்வூருணிகளைச்சுற்றியுள்ள கடைகள் வீடுகளிலுள்ளவர்கள் குடிப்பதற்கு உபயோகப்படுத்தப்படும் மேற்படி ஊருணிகளில் எச்சல் குப்பைகள் முதலியவைகளைக் கொட்டி ஊருணி ஜலத்தை சுகாதாரமற்றதாக்கிவிடுகிறார்களாதலாலும் மேற்படி அசுத்த ஜலத்தைக் குடிப்பதால் பொதுஜனங்களுக்கு பல தொத்துநோய்கள் பிடிக்க கூடியதாயிருப்பதாலும் மேற்படி ஊருணிகளைச் சுற்றிலுமுள்ள கடைகள் வீடுகள் முதலியவற்றை அப்புறப்படுத்தவேண்டும்.

## சினமங்கலத்தில் விருந்து.

(நமது நிருபர்) ஜூன் 11

திருவாடானை தாலூகா போர்டு மெம்பர் சினமங்கலம் N ராமசாமி செட்டியார் குமார ஜமீந்தார் மகா-௱-ஸ்ரீ காளைராஜா செட்டியாரவர்கள் தாலூகாபோர்டு பிரசிடெண்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டுவதற்காக சினமங்கலத்தில் ஒரு தேயிலை விருந்து அளித்தனர். விருந்திற்குப் பின் திரு. M. G. முருகதாஜய்யங்கார் அவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது.

## மலேயா இந்திய ஏஜெண்ட் பதவி.

ஸிம்லா, ஜூன் 8—

மலேயாவில் இந்திய ஸிவிலியின் ஒருவரை ஏஜெண்டாக நியமிக்க வேண்டுமென்று சமீபத்தில் சொல்லப்பட்ட யோசனைக்கு இந்தியா கவர்ன்மெண்டார் சாதகமாக இல்லை என்று தெரிகிறது. இந்த யோசனையை அமுலுக்குக் கொண்டு வருவதில் சர்க்காருக்குள்ள உண்மையான கஷ்டமெல்லாம் பண சம்பந்தமான கஷ்டந்தான.

## இந்தியாமீது ஜப்பான்சீற்றம்

பிரிட்டிஷல்லாத பருத்திச்சாமான்கள் மீது குறைந்த பட்சமான இறக்குமதி வரி விகிதத்தை 100-க்கு 50ல் இருந்து 75ஆக இந்தியா கவர்ன்மெண்டார் உயர்த்தியிருப்பதுபற்றி ஜப்பான் ஆத்திரம் கொண்டுள்ளது. ஆகவே ஜப்பான வியாபாரிகள் இந்திய பஞ்சை பஹிஷ்காரம்செய்யப் போவதாகவும் அமெரிக்காவிலிருந்து பருத்தி வரவழைக்கப் போவதாகவும் சொல்லிக்கொள்கிறார்கள்.



## சிவகெங்கை.

### தாலூகா போர்டு கட்டிடத் திறப்பு விழா.

சிவகெங்கையில் மேலூர் ரோடில் புதிதாகக் கட்டப்பட்டிருக்கும் தாலூகா போர்டு ஆபீஸ் கட்டிடம் சென்ற திங்களன்று திறந்து வைக்கப்பட்டது. அன்று மாலை 5 மணிக்கு போர்டு அங்கத்தினர்கள் வக்கீல்கள் இதர கனவான்கள் போர்டு உத்தியோகஸ்தர்கள் சிப்பந்திகள் பொது ஜனங்கள் ஆகிய 1000 பேர் விஜயம் செய்திருந்தார்கள். சிவகங்கை ராஜா சாஹேப் அவர்களையும் சப்கலெக்டரவர்களையும மேளவாத்தியத்துடனும் விருதுகளுடனும் அழைத்து வந்தனர். தேவகோட்டை சப்கலெக்டர் மிஸ்டர் J. P. லான்டோ I. C. S அவர்களைத் தலைமை வகிக்கும்படி தாலூகா போர்டுத் தலைவர் கேட்டுக்கொண்டார். பெண் குழந்தைகள் வாழ்த்துப்பாடினர் அங்கத்தினர்களை ராஜாவுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டது. ஒரு உபசாரப் பத்திரத்தை ராஜா சாஹேபுக்குபோர்டுத்தலைவர் படித்தளித்தார். கட்டிடத்தின் சரித்திரத்தை இஞ்சினீயர் படித்தார். உபசாரப் பத்திரத்தில் தண்ணீர்க் குழாயமைக்க உதவி செய்யவேண்டுமென்றும், ஸ்திரீகள் குழந்தைகள் வைத்திய சாலைக்குஉதவியளிக்கவேண்டுமென்றுமகேட்கப்பட்டிருந்தது. ராஜா பதிலளிக்கும்போது சமஸ்தானத்தின் பொருளாதாரம் அபிவிருத்தியடைவதைப் பொறுத்து தண்ணீர் குழாய் திட்டத்துக்குப் பண உதவி செய்வதாகவும், வைத்தியசாலைக்குப் பொது ஜனங்கள் யாவருமே உதவி செய்ய வேண்டுமென்றும் அப்படி உதவிபுரிவதில் தானும் ஒருவராக இருப்பதாகவும் குறிப்பிட்டார். தலைவர் ராஜா சாஹேபையும் போர்டு அங்கத்தினர் தலைவர்களைப்பற்றியும் பாராட்டிச் சில வார்த்தைகள் கூறினார். சி. உ. சுப. உடையப்பர் அவர்கள் வந்தனோபசாரங் கூறினார். பலகார விருந்தும் சங்கீதக் கச்சேரியும் நடைபெற்றன. இரவு,ஒரு விருந்து நடைபெற்றது.

(ஒரு நிருபர்.)

## கண்டவராயன்பட்டி.

**தனவைசியர் சங்கம்:**—சங்கத்தின் காரியதரிசி ஆத. சு பு. முத்தய்யா செட்டியார் அன்னிய நாடு பிரயாணம் போய்வருவதை முன்னிட்டு அவர்களுக்குப் பதிலாக கரு. அள. அழகப்ப செட்டியாரை அப்பதவிக்கு நியமித்திருப்பதுடன் ஆத. சு. அ. முத்தய்யா செட்டியாருக்கு நன்றிபாராட்டும்பொருட்டு, தெ. நா. தெண்டாயுதபாணிகோவில் முன் வெளியில் சங்கச்சார்பாக ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அதற்கு தெ. நா. காச்சியப்ப செட்டியார் தலைமை வகித்தார்கள். கரு. அள. அழகப்ப செட்டியாரால் வரவேற்கப்பெற்று சிவ. அழ. அழகப்ப செட்டியாரால் வந்தன உபசாரப்பத்திரம் படிக்கப்பெற்று அன்னவர்களுக்கு தேனீர் விருந்து அளித்து சிறப்பாக முத்தய்யா செட்டியாரவர்களுக்கும் தலைவரவர்கட்கும் புஷ்பஹாரம் சூட்டப்பட்டு மேள வாத்தியத்துடன் முத்தய்யா செட்டியார் கிரகத்துக்கு அனுப்பி சபையும் கலைவெய்தியது. —சங்க அபிமானி.

## சிங்கப்பூருக்கு விமானத் தபால்

இன்று பார்லிமெண்டில் கேட்ட ஒரு கேள்விக்கு இந்தியா உதவி மந்திரி ஸ்ரீ பட்லர் பதில் கூறியதாவது:-காரச்சி-சிங்கப்பூர் விமானத் தபால் போக்கு வரத்திற்கான ஏற்பாடுகளை அமுலுக்குக் கொண்டு வருவதை யொட்டி ஓர் சமரசம் ஏற்படும் விஷயமாக இந்திய சர்க்கார் இம்பீரியல் விமானத்தபால் நிலயம் இவர்களுக்குள் இன்னும் சமரசம் நடந்து வருகிறது. இந்தியர்களுக்கு விமானப் பயிற்சியளிப்பதை மேற்படி திட்டத்தில் முக்கிய அம்சமாக அமைப்பதற்குற்ற ஏற்பாடுகளைச் செய்வார்கள்.

## சம்பள ஜப்தி மசோதா.

ஆகஸ்டு மாதத்தில் கூடப்போகும் இந்திய சட்ட சபையில் சம்பளஜப்தி மசோதா வென்ற ஒரு மசோதா வாதத்திற்கு வரும். அதன் கருத்து மாதம் 100 ரூபாய்க்குக் குறைந்த சம்பளத்தை ஜப்தி செய்யக்கூடாதென்பதாம்.



ராவ்பகதூர்
மரு. சுப்பையா செட்டியாரவர்கள்.
மன்னர் பிறந்தநாளன்று "கேய்சரிஹிந்த்" தங்கப்பதக்கமளித்துக் கௌரவிக்கப்பெற்றிருக்கிறார்.

## லண்டனில் இந்திய ராஜீய மகாநாடு.

### சுபாஸ்பாபுவின் பிரசங்கம்.

லண்டன், ஜூன் 10—

3-வது இந்திய ராஜீய மகாநாடு இன்று லண்டனில் கூடிற்று. பாபு சுபாஷ் சந்தர போஸ் வர முடியாமற் போய்விட்டதால் அவருடைய அக்கிராசனப் பிரசங்கம் சபையில் படிக்கப்பட்டது. காங்கிரஸ் மகா சபையின் தலைமையை இதுவரை வகித்து வந்தவர்களின் போக்கை அவர் பலமாகத் தமது பிரசங்கத்தில் கண்டித்துவிட்டு மேலே கூறியிருப்பதாவது:—

ராஜீயப் போராட்டம் போதியவளவு உக்ரமாகவும் தீவிரமாகவும் நடக்கவில்லை. ராஜரீகத் துறையில் போதியளவு தந்திரமாகவும் நடந்துகொள்ளவில்லை. 1931-ம் வருஷத்திய டில்லி ஒப்பந்தம் (காந்தி-இர்வின் ஒப்பந்தம்) ஒரு பெரிய பிசகு. இப்போது ஒரு நெருக்கடியான சமயத்தில் சட்டமறுப்பு இயக்கத்தை நிறுத்திவைத்ததன் பலனாக, சென்ற 13 வருஷங்களாகச் செய்து வந்த வேலையும், தியாகமும் தேசத்தார் அடைந்த கஷ்டமும் உருப்படாமற போய்விட்டன.

இனி வருங்காலத்தில் செய்ய வேண்டிய வேலையைப்பற்றி அவர் விவரிக்கையில் சொல்லுவதாவது:—பிரிட்டனும் இந்தியாவும் சமரசமாகப் போவதென்பது சாத்தியமான காரியமில்லை. ஏனென்றால் இருவருக்கும் ஒரேவிதமான நன்மையோ சிரத்தையோ இல்லை. பல வருஷங்களுக்கொரு தடவை சமரஸம் பேசி, அரசியல் திருத்தம் கேட்டு வாங்குவதென்ற வேலையை அடியோடு இந்தியர்கள் விட்டொழிக்க வேண்டும். இதுவரை நடத்தியதைவிட இன்னும் பெரிய, விரிவான முறையில் மற்றொரு விடுதலைப் போராட்டம் நடத்த வேண்டுமென்று நான் வற்புறுத்துவேன். அரசியல் அறிக்கையின்படி சுதேச மன்னர்களைச் சேர்த்துக்கொண்டு சமஷ்டி ராஜாங்கம் ஏற்படுத்துவதை ஒப்புக்கொள்ள முடியாது. அது அநுபவசாத்தியமுமில்லை.

### மிஸ்டர் மாக்ஸ்டன் ஆதரவு.

காமன்ஸ் சபை மெம்பரான மிஸ்டர் மாக்ஸ்டன் இந்திய ராஜீய மகாநாட்டில் பேசுகையில், படேல் சுபாஷ் பாபு இவர்களின் அபிமானமான போக்கை வரவேற்பதாகவும், காந்திஜியை எப்போதும் ஆதரித்து வந்திருப்பதுபோல் இவ்விரு தலைவர்களையும் ஸ்வாதீன தொழிற்கட்சியார் தாங்கி நிற்பார்களென்றும் அறிவித்தார்.

## நான்கு வல்லரசுகள் ஒப்பந்தம்

### ஜர்மனி கையெழுத்திட்டு விட்டது

பிரிட்டன், பிரான்ஸ், இதாலி, ஜர்மனி ஆகிய நான்கு வல்லரசுகளும் செய்துகொ ஒப்பந்தத்தை ஜர்மனி சம்மதிக்கவேண்டிய பாக்கியிருந்தது. ஜூன் 7ந் தேதி அது சம்மதித்துக் கையெழுத்திட்டுவிட்டது.

### ஒப்பந்தத்தின் கருத்து

இவ்வொப்பந்தத்தின் கருத்து ஐரோப்பியதேசங்களில் சமாதானம் நிலைத்திருக்கும் என்ற நம்பிக்கையைப் பலப்படுத்தும் பொருட்டு 4 வல்லரசுகளும் தங்கள் ஒற்றுமையைப் பலப்படுத்துவதன் மூலமாகத்தான் உலகமெங்கும் உள்ள அமைதிக் குறைவும் பயமும் நீக்கக்கூடுமென்பதாகும்

கையெழுத் திட்டிருக்கும் நான்கு வல்லரசுகளும் சர்வதேச சங்கத்தார்வரையறுக்கின்ற முறையில் சமாதானம் நிலவ எல்லா முறையிலும் ஒத்துழைக்கவேண்டுமென்பது உடன்படிக்கையின் உட்கருத்து. இவ்வொப்பந்தம் 10 வருடகாலம் அமலிலிருக்கும். 8வது வருடத்திற்குள் எந்த வல்லரசேனும் ஒப்பந்தத்தை ரத்து செய்ய நோட்டீஸ் கொடுக்காதபக்ஷத்தில் அது எல்லையற்ற காலத்திற்கு அமலிலிருக்கும். பிறகு 2 வருட நோட்டீஸ் கொடுத்து எந்த வல்லரசும் நீங்கிக் கொள்ளலாம்.

### பிரஸிடண்ட் ரூஸ்வல்டின் அங்கீகாரம்

நான்கு வல்லரசு ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்ட கவர்ன்மெண்டுகள் பூர்வாங்கமாகக் கையெழுத்திட்டு விட்டது வருங்காலத்திற்கு ஒரு சுபசூசகமென்றும், சமாதானப் பாதுகாப்பின் நிமித்தம் அவர்கள் ஒத்துழைக்க ஒப்புக் கொண்டிருப்பதன் மூலமாக ஜினிவா லண்டன் மகாநாடுகளின் வெற்றிக்காக உழைத்துவருவோர் தைரியங் கொள்ளலாமென்றும், பிரஸிடண்ட் ரூஸ்வல்ட் அறிவித்தார்.

## சா. அ. ராம. கடை. இன்சால்வென்ஸி ரத்து.

இரங்கூன் சா. அ. ராம. கடையை இன்சால்வெண்டாக்க வேண்டுமென்று கொடுக்கப்பட்ட மனுவில் ஆகியிருந்த உத்தரவு ரங்கூன் ஹைகோர்ட்டாரால் ரத்து செய்யப்பட்டது. மேற்படி கடையாரிடமிருந்து கைப்பற்றிய எல்லாச் சொத்துக்களையும் மேற்படியாரிடம் திரும்பவும் ஒப்படைத்துவிட வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

## தந்திச் செய்தி

ரங்கூன், ஜூன் 14

| | |
|---|---|
| பெரிய மில் அரிசி | 170 |
| கசெய்ன் சின்ன மில் அரிசி | 177-8-0, 180 |
| கசேய்ன் எஸ். கியூ. | 190 |
| மீடோன் பஜார் | 190 |
| மீடோன் எஸ். கியூ. | 200 |
| புழுங்கலரிசி ரெடி | 230—235 |
| மில்சார் | 210—215 |
| யதாலே | 205—.30 |
| ஙசேய்ன் | 180—195 |
| நடப்பு வட்டி | 0—5—6 |

## லண்டன் ரப்பர் விலை.

லண்டனில புகைபோட்ட ரப்பர் ஷீட் பின்கண்ட தேதிகளில் பின்கண்டபடி வாங்குபவர் விலை இருந்திருப்பதாகத் தெரிகிறது.

ஜூன் 7 மூன்றரையும் அரைவீசம் பென்ஸ்
,, 8 மூன்றரையே வீசம்
,, 9 மூன்றரை
,, 10 மூன்றரையும் அரைவீசம்
,, 12 மூன்றேகாலே அரைக்கால்
,, 13 மூன்றேகாலே வீசரைவீசம்

## லண்டன் லிவர்பூல் ரப்பர் ஸ்டாக்கும் விற்பனையும்.

லண்டன் ஜூன் 12—

லண்டனிலுள்ள ரப்பர் ஸ்டாக் 42728 டன். ஆறுந் தேதியோடு முடிவான வாரத்தில் ஸ்டாக் 42457. 10ந் தேதியோடு முடிவான வாரத்தில் விற்பனையானது 881 டன். அதற்கு முந்திய வாரத்தில் செலவான ரப்பர் 517 டன்.

லிவர்பூல் ஸ்டாக் 58560 டன். ஒரு வாரத்துக்கு முந்தியிருந்த ஸ்டாக் 57560. இந்த வார விற்பனை 297 டன். சென்ற வாரம் விற்பனையானது 546 டன்.

## சிலோன் தேயிலை.

லண்டனில் ஜூன் 13-ந்தேதி பின்வருமாறு விலை இருந்ததாகத் தெரிய வருகிறது.

| | ஒரு ராத்தலுக்கு பென்ஸ் |
|---|---|
| காமன் பெக்கோ | $8\frac{1}{4}$ |
| ,, புரோக்கன் பெக்கோ | $8\frac{1}{4}$ |
| ,, ஆரஞ்சு பெக்கோ | $8\frac{1}{4}$ |
| ,, புரோக்கன் ஆரஞ்சு பெக்கோ | $8\frac{3}{4}$ |

## செய்கோன்.

(நமது நிருபரிடமிருந்து)
(ஆகாயத்தபால்)

சைகோன் ஜூன் 10.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் விலை | $150\frac{5}{8}$ |
| சிங்கப்பூர் விலை | 97-50 |
| நெல் விலை பிக்கல் (தா) | 1·87 |

## நாஸிக்மீது நடவடிக்கை

டைரோல் ராணுவத் தலைவரான கவுன்சிலர் ஸ்டீடில்கொலை செய்ய நேற்றிரவு நடந்த முயர்ச்சியின் பலனாக, ஆஸ்திரியாவிலுள்ள நாஸிகள் மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. நாஸித் தலைவர்களில 22 பேர் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள். இன்ஸ்பிரக்கிலுள்ள நாஸிகளின் தலைமை ஸ்தலத்தை ராணுவத்தார் கைப்பற்றிவிட்டனர். தெருக்களில் சமாதான பங்கம் ஏற்படாதபடி ராணுவ பந்தோபஸ்து செய்யப்பட்டிருக்கிறது. ஹர் ஸ்டீடில் நேற்று சுடப்பட்டபோது கையில் ஒரு குண்டுப் பாய்ந்தது. அவரைச் சுடுவதற்கு முன்பு ஸ்டீரியா கவனர் டாக்டர் ரின்டெலின் ஏறிவந்த வண்டியை வெடிவைத்து நாசம் செய்ய முயற்சி நடந்தது. ஆனால் அம்முயற்சி கைகூடவில்லை.

## கோர்ட்டுச் செய்திகள்.

### தேவகோட்டை ஜாயிண்ட் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டு.

முந்தின வாரத்தில் சூதாட்ட வழக்கு சம்பந்தமாக திருவாடானை சப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் 9 நகரத்தார்கள் அபராதம் விதிக்கப்பட்டார்களென்றும் அதன் மேல் ஜாயிண்டு மாஜிஸ்ரேட் கோர்ட்டில் எதிரிகள் அப்பீல் செய்திருப்பதாகவும் நாம் வெளியிட்டிருந்தோம். ஆர்க்மெண்டு ஆனபிறகு 7—6—33ல் ஷை வழக்கு சம்பந்தமாக, எதிரிகள் குற்றவாளிகள் அல்லவென்று ஜாயிண்டு மாஜிஸ்திரேட் அவர்கள் தீர்ப்புக்கூறினர்.

குறிப்பு:—சென்ற வாரத்தில் எதிரிகள் அபராதத்தைக் கட்டிவிட்டு அப்பீல் செய்தார்களென்று தவறுதலாக வெளிவந்தது பற்றி வருந்துகிறேன். அபராதம் கட்டாமல் தடை உத்தரவு வாங்கி அப்பீல் செய்தார்கள்.

### ஜாயிண்டு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டு, தேவகோட்டை.

இவ்வூர் பழ. ராம. லெட்சுமணன் செட்டியார் T S சாத்தப்ப செட்டியார் பேரில் தொடுத்திருந்த வழக்கு இன்றையதினம் எடுத்துக் கொள்ளப்பட்டது. T. S. சாத்தப்ப செட்டியாருக்காக poox யும் மற்ற மூன்று எதிரிகளும் ஆஜரானர்கள். வழக்கு விசாரணைக்கு 24—6—33 தேதிக்கு வாய்தா போடப்பட்டிருக்கிறது. 1 முதல் 3 எதிரிகளுக்கு N. கோபாலாசாரியாரும் 4-வது எதிரிக்கு தோழர் R அருணசலமய்யரவர்களும் ஆஜராயிருக்கிறார்கள்.

### தேவகோட்டை டி. மு. கோர்ட்டு. மீனுக்ஷிஆச்சி ஜீவனும்ச வழக்கு.

8-6-33

காரைக்குடி நா. லெ. மு. ராமநாதன் செட்டியார் பிரதி வாதியும் ஷை பார் மனைவி மைனர் என்று சொல்லப்பட்ட மீனுக்ஷி ஆச்சி வாதியுமாக மூப்பு எடுத்துவைப்பதற்காக போட்டிருந்தவழக்கு இன்றையத் தினம் எடுத்துக்கொள்ளப்பட்டது. பிரதிவாதி வாதி கெட்டநடத்தையுள்ளவளென்றும் சென்ற 3-வருஷங்களாக துஷ்டர்களுடன் சகவாசம் வைத்திருந்தவளென்றும் வாதிக்கு பிரதிவாதியை ஜீவனும்சத்திற்குத் துயர யாதொரு பாத்தியதையும் கிடையாதென்றும் பிரதிவாதிக்கு ஏற்பட்டிருக்கும் செலவை வாதி கொடுக்க வேண்டுமென்றும் பிரதிவாதி ஸ்டேட்டுமெண்டு தாக்கல் செய்ததின் பின்னர் வாதியின் வக்கீல் வழக்கை நிறுத்திக் கொள்வதாகச் சொன்னதால் பிரதிவாதி வாதிக்கு செலவு தொகையன்னியில் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.

### ஏஜென்ஸி மோசம் செய்ததாக.

கேரளா கில்ட்டு எட்ஜ் ஸெக்யூரிட்டி இன்ஷூரன்ஸ் கம்பெனியின் ஏஜெண்டாக இருந்த S. N. நாயரின் பேரில் மோசத்திற்கும் கம்பெனிக்கு கட்டவேண்டிய பிரிமியத்தை கையாடல் செய்ததற்கும் இவ்வூர் தோழர் டி. வி. அருணாசலம் செட்டியாரால் தொடுக்கப்பட்ட வழக்கில் இ. பி. கோ. 403, 417 வது செக்ஷன்களின்படி சார்ஜ் எடுக்கப்பட்டு ஆராவயல் முகாமில் 28—6—33உக்கு வாய்தா போடப்பட்டிருக்கிறது.

### இங்கிலாந்தில் இந்தியாவுக் கனுகூலம்.

இங்கிலாந்திலுள்ள ஆக்ஸ்போர்டு கலாசாலையிலுள்ள மாணவர்கள் இந்தியாவுக்களிக்கப்போகும்சுயாட்சியை விளக்கும் வெள்ளைக்கடுதாசியைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

## தேவகோட்டை.

வக்கீல் சங்கம்:—இவ்வூர் வக்கீல்கள் சங்கத்தார் அப்பீல் ஸைடு ஹைக்கோர்ட்டு ஜட்ஜுக்கு இவ்வூர் முன்சிப் மகா-ள-ள-ஸ்ரீ ஸ்ரீ எ. ராமனுஜய்யரவர்கள் திருநெல்வேலிக்கு சப்ஜட்ஜாக மாற்றப்பட்டிருப்பதால் அவ்வூர் முன்சிப்கோர்ட்டுக்கு அதிக அனுபவமுள்ள சீனியர் முன்சீயை நியமனம்செய்யுமாறு தந்தி அடித்திருக்கிறார்கள். இவ்வூரில் தற்பொழுது முன்சீபாக இருந்துவரும் மகா-ள-ள-ஸ்ரீ எ. ராமனுஜய்யரவர்கள் திருநெல்வேலிக்கு சப்ஜட்ஜாக மாற்றப்போகிறார்கள். அன்னார் ஜூடிஷியல்ஸர்விஸில் 20 வருஷ அனுபவமுள்ளவர் இவ்வூர் வக்கீல்களிடத்தில் மிக்க அன்புள்ளவர் ஷை முனிசிப் மகா-ள-ள-ஸ்ரீ எ. ராமனுஜய்யரவர்களுடன் மாற்றிப் போவதால் இவ்வூருக்கு சீனியர் முனிசிப் ஒருவரை நியமனம் செய்யவேண்டும் என்று சென்னை அப்பீல்ஸைடு ஹைகோர்ட்டு ஜட்ஜுக்கு தந்தியடித்திருப்பதாகத் தெரிகிறது.

பழைய மாணவர் சங்கம்:— இவ்வூர் பழைய மாணவர் சங்க 2-வது வருஷக் கொண்டாட்டம் N S M V ஹைஸ்கூலில் இன்று மாலை 2 மணிக்கு ஆரம்பமாயிற்று. நிர்வாக மெம்பர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் 3-30-க்கு தேநீர் விருந்து நடந்தது. பிறகு 4-30 மணிக்கு ஹைஸ்கூல் ஹாலில் இவ்வூர் டிஸ்டிரிக்ட் முன்சீப் மகா-ள-ள-ஸ்ரீ A ராமனுஜய்யரவர்கள் BABL தலைமையில் ஒரு கூட்டம் நடைபெற்றது. K R ராமசாமி பள்ளிக்கு வாழ்த்துக் கூறவும் பள்ளிக்கூடத்து தலைமை உபாத்தியாயர் ஸ்ரீமான் ரெங்கசாமி அய்யங்காரவர்கள் பதிலளித்தார்கள். தோழர் DS ராஜகோபாலன் BABL நாட்டுக்கு வாழ்த்துக்கூறுகையில் ஹரிஜன ஊழியத்தைப்பற்றி வெகு தெளிவாக எடுத்துக்கூறினர். மாலை 6 மணிக்கு தலைவர் முடிவுரையுடன் கூட்டம் இனிது முடிவுபெற்றது. இரவில் சமபந்தி போஜனமும் பின்னர் விகடக்கச்சேரியும் டாகடர் N S நாகராஜன் L M P அவர்களின் வாய்ப்பாட்டும் நடந்தன.

### புதுவயல்

ஸ்ரீ சரஸ்வதி சங்கத்தின் 12-வது ஆண்டு முதலாவது மாதக்கூட்டம் நாளது வைகாசித் திங்கள் 14-ம் நாள் மாலை 4½ மணிக்கு மேல் கோவில்பட்டி திருவாளர். இ. எ. குருசாமி தீக்ஷிதர் அவர்கள் தலைமையில் 'மாதர்முன்னேற்றம்' சோம. தியாகராஜன் செட்டியாரவர்களாலும், திருவள்ளுவர் வீரமொழி, ஒற்றுமை, தமிழ்மொழி, மக்கட்பேறு, கடலின் இயற்கை அழகு, ஏழைச் சிறுமி செல்வச் சிறுமி (சம்பாஷணை) கை செய்யும் உதவி (நடிப்பு)வில் பாட்டு முதலியன ஸ்ரீ சரஸ்வதி வித்தியாசாலை மாணவ மாணவிகளால் உபந்யாசிக்க தலைவரவர்கள் முடிப்புரை பகர்ந்தபின் வந்தன வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

(ஒரு நிருபர்)

### மக்கள் கட்டும் மலை.

ஆஸ்திரேலியாவில் விக்டோரியா மகா ராணியின் ஞாபகார்த்தமாக ஒரு மலையைக் கட்டுகிறார்கள். அஸ்திரேலியாவிலுள்ள ஒவ்வொரு மனிதனும் ஒரு கன அடி மண்கொண்டு கொட்டவேண்டும். அது ஓர் பெரிய மலை போல் குவியும். அதில் மரம் செடி கொடிகள் நட்டுக் காடாக்குவார்கள்.

### சென்னைமாகாண அரசியல் கைதிகள்.

தற்போது சென்னை மாகாண சிறையிலுள்ள சட்டமறுப்பு அரசியல் கைதிகளின் தொகை 600 என்று தெரிகிறது.

## நோட்டீஸ்.

### கோனுபட்டு ராம. சு. லெ. ஷண்முகஞ் செட்டியார் சம்பந்தமாக நோட்டீஸ்:—

இதனல் சகலமான பேர்களுக்கும் தெரிவிப்ப தென்னவென்றால்:—

கோனுபட்டு ராம. சு. லெ. ஷண்முகஞ் செட்டியார் என்ற சுப்பிரமணியஞ் செட்டியார் மெஜாரிட்டி யடைந்து சுமார் 5 வருஷ ஆகிறது. இதற்குள் துஷ்டர்கள் சகவாசத்தினுல் துன்மார்க்கத்தில் மூழ்கி, பூர்வீக எஸ்டேட்டு பெரும்பான்மையும் அனுவசியமாயும் அக்கிரமமாயும் யாதொரு பிரதிப்பிரயோஜன மன்னியிலோ அல்லது சொற்பப் பிரதிப் பிரயோஜனத்துக்கோ விரயம் செய்துவிட்டது மன்னியில் பாக்கி நிற்கும் சொற்ப சொத்துக்களையும் யாதொரு நியாயமன்னியில் தன் துன்மார்க்கச் செலவுகளுக்காக சொற்பத்துகை வாங்கிக்கொண்டு பாராதீனம் செய்யப் போவதாகப் பிரயத்தனம் செய்துவருகிறார். தாலையிலிருக்கும் சொத்துக்களை விரயம் செய்வதற்காக பர்மாவுக்கு சமீபத்தில் புறப்படுவதாகவும் தெரியவருகிறது. ஷை யாரிடம் ஒருவரும் எந்த சொத்தையும் வாங்கக் கூடாதென்றும் அவ்விதம் வாங்கினுல் ஷையாருடைய அவிபக்த மகனுன மைனர் சொக்கலிங்கத்தைக் கட்டுப்படுத்தக்கூடியதில்லையென்றும் ஏற்கனவே ஷையார் செய்திருக்கும் பாராதீனங்களுக்கும் ஷை மைனரைக் கட்டுப்படுத்தக்கூடிய தில்லை யென்றும் இதின் மூலம் தெரிவிக்கப்படுகிறது.

ஷை மைனர் சொக்கலிங்கத்தின் தாயாரும் கார்டியனுமான மீனுக்ஷியாச்சியின் இன்ஸ்டிரக்ஷன்ஸ் பேரில் இந்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது.

V. S. லெக்ஷிமிநாராயணய்யர், அட்வகேட்.

தேவகோட்டை } 13—6—33.

## பழநியில் மகாகும்பாபிஷேகம்.

1. பழநி ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமிக்கு அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 30—6—1933 வெள்ளிக்கிழமை காலை 10 மணி முதல் 10½ மணிக்குள்ளாக நடத்தப்படும். 25—6—33 உ முதல் 29—6—33 உ வரையில் யாகசாலை பூஜை நடக்கும். பக்தர்கள் வந்து தெரிசித்து பகவத் பிரசாதம் அடையவேணுமாய் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

2. தேவஸ்தானம் செலவில் நடக்கிறது. செலவுக்கு அதிக தொகை வேண்டியிருக்கிறது. வேத பாராயணம், 'தேவாரபாராயணம்' அன்னதானம் முதலியவை நடத்தப்படும். பக்தர்கள் தங்களால் இயன்ற பொருளுதவி இந்த கைங்கர்யத்திற்கு செய்ய வேணுமாய் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

3. அடியிற்கண்ட விலாசத்திற்கு தொகையனுப்பலாம். வரவு தொகைக்கு ரசீது அனுப்பப்படும். அவர்கள் பெயரும், தொகையும் கடைசியில் பிரசுரிக்கப்படும்.

A. சிவசுப்பிரமணிய முதலியார், (பென்ஷன் சப்மேஜிஸ்டிரேட்) தேவஸ்தானம் மானேஜிங் டிரஸ்டி.

பழநி. } 9-6-33.







## இங்கிலாந்தில் பெண் விஞ்ஞானிகள்.

"பெண்கள் பேதைகளென்ற பேய் மாற்றம் தொலைந்து அறிவூற்றுகள் என்ற ஆழ்ந்த கருத்து உலகம் முழுதும் ஓங்கி வருகிறது. அதற்கேற்ப அவர்களும் பலதுறையிலுமுள்ள தம் ஆற்றலை விளக்கி வருகிறார்கள். அமெரிக்காவில் ஒருவர் "இந்த நாட்டிலுள்ள 247 விஞ்ஞானிகளின் பெயரை எழுதினுல் அதில் மூன்று விஞ்ஞானிகள் பெண்களாயிருக்கக் காணலாம்" என்று சொன்னர். ஆனுல் இங்கிலாந்துப் பெண்கள் நிலைமை தெரிந்த இன்னொருவர் இலங்கை டெய்லி ந்யூஸில் "100 ஆங்கில விஞ்ஞானிகளின் பெயரை எழுதினுல் எட்டுப் பேர் பெண்களாயிருக்கக் காணலா" மென்று எழுதுகிறார்.

### ஸ்ரீமதி டோரிஸ் மாக்னன்.

இங்கிலாந்து பெண்விஞ்ஞானிகளில் முதன்மையானவர் டோரிஸ் மாக்னன் ஆம். இவரை சர்வதேசங்களும் ஓர் மிகத்தேர்ந்த பிராணி சாஸ்திர நிபுணரென்று ஒப்புக்கொள்கின்றன. இளமையும் நல்லஉடற்கட்டும் சௌந்தரியமுமுடைய இவரை கடந்தமகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் ஆஸ்பத்திரிகளில்புரோட்டோஜூவாலஜிஸ்டாக நியமித்தார்கள். ஆபர்டீனில் பிறந்து தேர்ச்சிபெற்று எண்ணிறந்த விஞ்ஞானிகளைப் பயிற்றுவித்த இவர் தற்போது செல்ஸீயில் வசிகிறார்.

### ஸ்ரீமதி ஹெலன்.

அடுத்தபடியாக தவர சாஸ்திர நிபுணராய் ஸ்ரீமதி ஹெலன்கெய்ன் வாகன் என்பவர் விளங்குகிறார். இவர் தற்போது லண்டன் அரசர் கல்லூரியில் தாவர சாஸ்திரியாயிருக்கிறார். ஸ்ரீமதி ஹெலன் சற்றுஉயரமாகவும், ஆடம்பரமாகவும், கம்பீரமாகவும், தோற்றுகிறார். அவருடைய கணவரும் ஓர் தாவரசாஸ்திரியாம். இருவரும் இரு தனித்தனிக் கல்லூரிகளில் வேலைபார்த்து வருகிறார்கள். விடுமுறைக் காலங்களில்தா னிருவரும் சந்திப்பார்கள். அக்காலங்களில் அவர்கள் விசேஷமான ஆராய்ச்சிகளில் இறங்குவது இயல்பு. ஸ்ரீமதி ஹெலன் சமீபத்தில் பார்லிமெண்டு ஸ்தானத்திற்கு அபேக்ஷகராகவிருந்தார். அவர் குழந்தைகட்கு முத்தம் கொடுப்பது தீமையான செயலென்று வழிநெடுக உபதேசம் செய்துவருகிறார்.

### ஸ்ரீமதி ஹேரியட்.

ஸ்ரீ ஹெலன், மாக்கினன் இவர்கள் தத்தம் துறைகளில் எவ்வளவு கை தேர்ந்திருக் கின்றார்களோ அதே போல நோய் நுட்பங் காணுங் கலையில் ஸ்ரீமதி ஹெரியட் சிக் சிறந்து விளங்குகிறார். தற்போது இவர் லிஸ்டர் கலாசாலையில் வேலை பார்த்துவருவதோடு வைடமின் (சத்துப்பொருள்) சம்பந்தமான கலையில் உலகப்பண்டிதாய் மிளிர்கின்றார். அவர் பெண்ணுலகில் எவ்வாறு அறிவில் சிறந்து விளங்குகின்றரோ அதேபோல அழகுலகிலும் வசீகரத்தில் சிறந்து விளங்குகிறார்.

### டாக்டர் டோராத்தி.

மற்றொரு விஞ்ஞானியை சொல்வதானுல் டாக்டர் டோராத்தி ஜோர்டனைக் குறிப்பிடப்படவேண்டும். இவர் இளமையும் அழகும் மிகுந்தவர். இவருடைய நிபுணதத்துவம் புரோட்டின் சம்பந்தமான அறிவிலிருக்கிறது. அல்லாமலும் கருத்தனத்திலும் நல்ல தேர்ச்சியுண்டு. இவற்றையெல்லாம்விட மலையேறுவதில் காண்பிக்கும் விருப்பமே அபாரம். ஆலப்ஸ் மலையின் பல பகுதிகளைப் பல தடவை ஏறிப்பார்த்திருக்கிறார்.

### ஸ்ரீமதி மெல்லன்பி.

இவரைப்போன்றே உலகம்ஸ்ரீமதி மெல்லன்பி என்பவரையும் மெச்சுகின்றது. ஸ்ரீமதி மெல்லன்பி ஜீரணத்தால் பற்கள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன வென்பதை அதிசயமான முறையில் கண்டுபிடித்துக் கொண்டார். இன்று தாபுலகம் அவருக்கு எவ்வளவு கடமைப்பட்டிருக்கின்றதென்பதைக் கூறமுடியாது.

### இன்னும் பலர்.

இவ்வண்ணம் இங்கிலாந்தில் பாக்டீரியா நிபுணராகிய டாக்டர் ஹானர் பெல்லும், உடற்கூற்று நிபுணரான வினிபிரட் கல்லிஸ்ஸும், தாவர சாஸ்திர வல்லுநர் டாக்டர் எதல் நான்ஸி மைல்ஸ் தாமஸும் இதுபோன்ற பலருமிருப்பது நம்மிந்தியர்க்கு வியப்பும் படிப்பும் ஓர் இடிப்புமாகும். ஓர் ஆங்கிலப்பத்திரிகை இம்மங்கையரைப்பற்றிக்கூறிவிட்டு "இவர்கட்கு புருஷர்கட்கோர் பாடம் கற்பிக்க முடியும்" என்கின்றார். ஆங்கில ஆண்களுக்கே பாடம் கற்பிக்க முடியுமென்றால் இந்திய புருஷர்கட்கு எத்தகைய பெரும் பாடத்தைக் கற்பிக்கமாட்டார்கள். அதோடு தமிழ் நாட்டுப் பழங்கிழக்கட்குப் போதிக்கக்கூடிய பாடத்திற்கு அளவுண்டா? தமிழ்நாடே! விழித்துப்பார். இன்னும் கண்ணை மூடிக்கொண்டிருந்து கொண்டு, பாடினபாட்டையே பாடி தலையை அசைத்துத் தாளம் போட்டுக் கொண்டிருந்தாயானுல்—இப்பொழுதே உன் நாடகத்தைப் பார்ப்போர்கள் "உள்ளே போ, உள்ளேபோ" வென்று கத்துகின்றார்கள். அதற்கும் சும்மாயிருந்தாயென்றால்—உன் படுதாவிற்கு நெருப்புவைக்கப்பட்டு, கொட்டகைக்கு எரி மூட்டப்பட்டு, நீயும் கையைப் பிடித்து இழுத்தெறியப்படுவாய். அதற்குள்ளாக ஆண்மையுடன் கண்ணைத் திறந்து பாட்டை மாற்றிக்கொள்.

## சுந்தரியின் துணிபு.

(5-பக்கத் தொடர்ச்சி)

வறுமைப்பிணியை ஒழிக்க என்னை அமரசிங்கம் பிரபுவுக்கு விற்கத்துணிந்தீர்கள். அவரும் பணத்தினால் வாங்கிக்கொள்ள சம்மதித்து அதற்காகப் பேசிய தொகையை தங்களிடம் தந்தார். தங்கள் கடனும் தீர்ந்தது. என்னால் நீங்கள் அடையவேண்டியது அதொன்றே. அதுவரை உங்களுக்காக வைத்திருந்த உடலையும் உயிரையும் உடையவரிடம் ஒப்படைத்துவிட்டேன். ஆகவே நீங்கள் இனி எனக்காக வருந்தவேண்டாம். உடலும் உயிருக்தான் உடையவரிடம் சேரவேண்டுமென்ற கருத்துடன் உடலின் மேலிருந்த (அமரசிங்கம் பிரபு ஆசையால் பூட்டிய) ஆடை ஆபரணங்களைக் களைந்து இங்குவைத்துவிட்டேன். பெண்களுக்கு வேண்டிய சுகங்கொடுக்க முடியாப்பேதை பிரபு பொனசாறி என்ற பேருக்காக ஆடை, ஆபரணங்களால் அலங்கரித்துப் பார்க்கப் பிரியப்பட்டால் என்போன்ற ஓர் பதுமையை உண்டாக்கி அதற்குப்பூட்டி அழகு பார்க்கட்டும். இங்ஙனம் தங்களுக்கு இன்னும் துன்பத்தை தரும் சுந்தரி.

பார்த்தார் பிரபு. பக் பக் என்று விழித்தார். பணம்போய் விட்டதே என்செய்வேனென்றார். இவர் பலவாறுய் பிதற்ற கலியாணத்திற்கு வந்திருந்த பலரும் ஏக்கமுற்று என்செய்வதெனத் திகைத்தனர். இத்தருணம் தந்திச் சேவகன் ஓர் தந்தியைக் கொண்டுவந்து சோமசுந்தரம் கையில் கொடுக்க அவர் பிரித்துப்பார்த்தார். அதில் தங்தையே குறித்த முகூர்த்தத்தில் இந்த உடலையும் உயிரையும் உடையவராகிய வீரசிங்கம் அவர்களிடம் ஒப்படைத்துவிட்டேன். அஞ்சற்க. அன்புள்ள சுந்தரி என்றிருந்தது. தந்தியைப் பார்த்ததும் சோமசுந்தரம் வியப்புற்றார். இது எப்படி நடந்ததென அமரசிங்கம் பிரபுவே வெட்கமுற்றார். நடந்ததை எண்ணி வந்தவர்களோ சென்று விட்டார்கள் சொல்லிக்கொள்ளாது. வாத்தியக்காரர்களோ போய் விட்டார்கள் பணத்தை வாங்கிக்கொண்டு.

0 0 0

ஓர் மோட்டார் வேகமாய் செல்வபுரியை நாடிச்சென்று கொண்டிருக்கிறது. அதிலிருந்த நால்வரில் நமது நங்கை சுந்தரி வீரசிங்கத்தைப்பார்த்து "எனதன்பே! என் கடிதம் கிடைத்ததும் வந்து தருணத்தில் காத்தீர்கள். கூடஇருக்கும் புண்ணியஆத்மாக்கள் யாரென்றான்.

எனதாருயிரே, அவர்களைப்பற்றி சங்கோசப்படாதே அவர்களில் கார் ஓட்டுபவர் நமது ஆப்த நண்பர். அருகிலிருப்பவர் அவரின் அன்புத்துணைவி. அவ்விருமே இங்குவந்து உன்னை எடுத்தேகத்தூண்டி உதவியாய் நின்ற உத்தமசீலர்களென்றான் வீரசிங்கம்.

என்பிரியகாதல! உங்களுக்கேற்பட்ட இடுக்கண்களால் என்னை நினையாது இருந்துவிடுவீர்களோ வென்றேக்கமுற்றேன். அவை ஒருவாறுய் நீங்கியது.

பிரியகாதலி என்விஷயம் முற்றிலும் தெரிந்தபின்னும் என்னை நேசிக்கிறாயா?

என் இன்பப்பெருக்கே நீங்கள் இவ்வாறு கேட்பது விந்தையாகஇருக்கிறது. உம்மையன்றி வேறு எவரையும் விரும்பாதிருக்க செய்தது உமது உத்தமகுணமும் உண்மைக்காதலுமன்றோ? உமது தற்கால நிலைமைஎந்தவிதத்திலும் எனது உறுதியை மாற்றாது.

என் கண்மணி நன்றாய்யோசித்துச் சொல். நீ எளியகுடும்பத்தில் பிறந்துவேலை செய்து பழகி யிருந்தாலும் இனி என்னுடன் சேர்ந்து இன்னும் கஷ்டமான வேலைகளைச்செய்ய நேரிடும். நானோ பணியாளரை ஏற்படுத்தக்கூடிய நிலையிலில்லை.

பிராணபதி அறிவேன். வேலைக்கோ சொன்ன சொல்லை நிறைவேற்றுவதற்கோ நற்குண மங்கையர் பின்வாங்கார் என்பதை நன்குணர்ந்த தாங்கள் என்னை சோதிப்பதழகோ? நீங்கள் இன்றுள்ள நிலையினின்றும் இன்னும் இதக்குமனையிநீங்கி இடர்மிகுசிறைப்பட்டாலும் விதந்தருகோடியின்னல் விளைந்தெனையழித்திட்டாலும் உங்களன்பில் ஊன்றியகாதலைமாற்றேன். இனிஎன்னை ஆட்கொள்ளும் என்றுசொல்லிச் சாய்ந்தாள் சுந்தரி வீரசிங்கத்தின் மார்பில்.

மோட்டாரும் செல்வபுரியில் வீரசிங்கம் வசிக்கும் பங்களாமுன்வந்து நின்றது. நால்வரும் இறங்கி உள்ளே சென்றனர். அங்கு இவர்கள் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த பாலசிங்கம் பிரபுவும் பல பெரியோர்களும் உடனே வரவேற்று பசரித்து வீரசிங்கத்துக்கும் சுந்தரிக்கும் விவாகத்தை முடித்துவைத்தனர். அத்தருணம் தந்திச்சேவகன் வந்து ஓர் தந்தியை வீரசிங்கம் இடம் கொடுத்தான். அவசரமாய்ப்பிரித்தான் வீரசிங்கம். அதில் அயர்லாந்து லாட்டரில் 50000ம் பவுன் அவனுக்கு கிடைத்ததாய் இருக்கவே ஆனந்தமுற்றான் அனைவோருக்கும்தெரிவித்தான்.

குறிப்பு:—சகோதரிகளுக்கு. சுந்தரியின் துணிபு என்ற இச்சிறுகதையை கண்ணுறும் நீங்கள் ஒவ்வொருவரும் அச்சுந்தரியைப்பின்பற்றி துணிபுகொண்டீர்களாயின் கிழவர்கள் விவாகம் இனிக்கிட்டாதென மறந்துவிடுவார்களென்பது திண்ணமன்றோ?





## வலம்புரி அலர்மேலு பெண் கல்லூரி.

### மூன்றாவது ஆண்டு நிறைவு விழா.

31—5—33 பிற்பகல் கல்லூரி அரங்க மேடைக்கண் மிக்க சிறப்பாக இவ்விழா நிகழ்ந்தது. பொன்னமராவதி டாக்டர் திரு. R. நாராயண ராவ் அவர்கள் L. M. P. தலைமை ஏற்றார்கள். தலைவரவர்களை திரு. ராம. லெட்சுமணஞ் செட்டியார் M. L. C. அவர்கள் வரவேற்று நன்மொழி கூறினார்கள். தலைவரவர்களின் இனிய முன்னுரைக்குப்பின் மாணவிகள் பலராலும் விரிவுரையும் உரையாடல்களும் நிகழ்த்தப்பெற்றன. திருவாளர் பண்டித கருணாலய பாண்டியப் புலவர் அவர்கள் நட்பின் சிறப்பு என்னும் பொருள் குறித்துச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். நெற்குப்பை திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் மநுச்சோழன் மாண்பு என்பதுபற்றி அரிய விரிவுரை நிகழ்த்தினார்கள். புதுக்கோட்டை தேசஊழியன் பத்திராதிபர் திரு. ஆ. சு. முத்துக்கிருஷ்ண ஐயரவர்கள் பெண் கல்வி என்னும் பொருள் குறித்துப் பெருஞ் சொல் மொழிந்தார்கள். மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. தலைவரவர்கள் கருத்துரைத்துக் கல்லூரி தலைவரவர்களின் பெருந்தன்மையும் போறமும் புகழும், பயனும் விரித்துக் கூறினார்கள். திரு. ராம. லெ. M. L. C. அவர்கள் நன்றி கூறினார்கள். மகிழ்வுடன் கூட்டம் நிறைவுற்றது.

### மண்டை யோட்டில் செலுலாயிடு.

காக்கைவலி அல்லது அபஸ்மார ரோகத்தைப் போக்குவது தற்போது வைத்தியர்களுக்குப் பெருங் கஷ்டமாயிருந்து வருகிறது. ஆனால், தற்போது மன்ஹாட்டனைச் சேர்ந்த டாக்டர் கார்ல் நே என்பவர் இந்நோயைக் குணப்படுத்துவதற்காக ஒரு புதிய முறையைக் கண்டு பிடித்துள்ளார். அதாவது இந்நோயுள்ள ஒரு மனிதனின் மண்டையோட்டில் சிறிது வெட்டி எடுத்து விட்டு செலுலாயிடு துண்டு ஒன்றை அவ்விடத்தில் வைத்துவிடுவதன் மூலம் இந்நோயைக் குணப்படுத்திவிடலா மென்று கூறுகின்றார்.





பெண்கள் பகுதி.

## சீன மாதர்கள் சுதந்திர வேட்கை.

### சில வருடங்களுக்குள் எய்திய முன்னேற்றம்.

### பிராங் ரானின்சன் குறிப்பு.

"வொரல்டு யூனிடி மாகஸின்" என்ற பத்திரிகைக்கு மிஸ்டர் பிராங் ரானின்சன் என்பவர் "சீனவின் மாற்றமுறுங்கலை" என்ற தலைப்பின்கீழ் ஓர்கட்டுரை வரைந்திருக்கிறார். அதன் ஓர் பகுதியாவது:—

நான் ஏற்கனவே சொன்னதுபோல சீனவில் பெண்களை சட்டப்படி சமத்துவமுடையவர்களாக்கும்பொருட்டு பலமான கிளர்ச்சி நடைபெற்று வருகின்றது. அதுஒருபாலிருக்க இன்னொருபால் நாகரிக உணர்ச்சி பெற்ற சீனர்கள் பெண்கட்கு சமத்துவம் கொடுத்து வருகிறார்கள். அவர்கள் ஏற்கனவே பெண்கட்கு சுதந்திர உணர்ச்சியை யூட்டி சமத்துவம்தேடும்ஆசையை யுண்டுபண்ணி விட்டார்கள். 1923ம் வருடம் சர்வதேசக் கல்விப் பயிற்சிக் கழகம் ஓர் அறிக்கையை வெளியிட்டது. அவ்வறிக்கையில் 'பெண்கட்குக் கல்வியறிவுவேண்டுமென்ற கொள்கையை கிருஸ்தப் பாடசாலைகளில் நடைமுறையில்காணபித்ததோடு அதுபற்றியபிரசாரத்தையும் அந்தப்பாடசாலைகளே செய்யவும் செய்தன" என்று குறிப்பிடப்பட்டது. தற்போது சீனமாதர்கள் வெளிநாடுகட்குக் கல்விகற்கச் சென்றிருப்பதாகவும் தெரிகிறது. மேலே சொன்ன சர்வதேசக் கல்விப்பயிற்சிக் கழக அறிக்கையின் மற்றொரு பகுதி வெளிநாடுகட்குக் கல்விபயிற்சிக்காகப்போகும் பெண்களை பரிசோதனை செய்ததில் ஆண்களைவிட ஆற்றலிலும் அறிவிலும் இதர சக்திகளிலும் எட்டுணையாவது இளைத்தவர்களல்லவென்று கண்டுகொண்டோம்" என்று கூறுகிறது.

சீன மாதர்கள் ஒவ்வொரு இலாகாவிற்கும் தனித்தனியாகப் பரிட்சிக்கப்பட்டபோது அந்த இலாகாவுக்கு ஆண்களைப்போல சரிசமமான ஆற்றலுடையவர்கள் என்று கண்டுகொள்ளப்பட்டது. கிருஸ்தவ மதாலயங்களில் பெண்கள் நியமிக்கப்பட்டகாலையில் அவர்கள் குறைவறக்கமிட்டிகளை நிர்வாகம் செய்தும், போர்டுகளை நடாத்தியும் மேலே சொன்ன கூற்றுக்கு உதாரணமாயிலங்கினர்கள்

1922ம் வருடத்தில் கிருஸ்தவ பிரதமப் பள்ளிக்கூடங்களில் வாசித்து வந்த பெண் குழந்தைகளின் தொகை ஆண் குழந்தைகளின் தொகையில் மூன்றிலொரு பகுதியாம். சர்க்கார் பாடசாலைகளில் மாணவிகள் தொகையின்னும் கொஞ்சம் குறைவாகவேயிருந்தது. அதே சமயத்தில் பெண் குழந்தைகளை எவ்வகையான பாடசாலைகளிலும் அனுமதிப்பதென்ற முறையும் கையாடப்பட்டது. 1928ம் வருடத்தில் மாணவிகள் தொகையதிகரிக்க, அதன்மூலம் நார்மல் ஸ்கூல்களில் மட்டிலுமே நூற்றுக்கு 21 விகிதம் பெண் மக்கள் நிரம்பினர். இத்தகைய நார்மல் ஸ்கூல் படிப்பு பெண்கட்கு ஓர் புதிய வாழ்க்கையைக் கொடுப்பதாயிருந்தது. இப்போது சில சீனமாதர்கள் அரசியல் நிர்வாகசபைகட்குச் செல்லவும்கூட ஆற்றல் பெற்றிருக்கிறார்கள். பெரிய பெரிய பட்டணங்களில் பல தொழிற்சாலைகளைப் பெண்கள் நடத்தி வருகின்றார்கள். அவர்கள் சீனத் தொழிற்சாலைகள் மட்டிலுமல்ல, வெளிநாட்டாரால் நடத்தப்பட்டு வரும் சாலைகளிலும்கூட இடம்பெற்றிருக்கின்றார்கள். ஷாங்காய் நகரத்தில் மிகத் திறமையாக நடைபெறும் ஒரு பாங்கி பெண்கள் பாங்கியாம்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஓர் சீன மேதாவியார் நல்லொழுக்கம் சம்பந்தப்பட்டவரையிலும் சீன ஆண்கட்கும் பெண்கட்கும் சமத்துவமிருக்க வேண்டுமென்று உபதேசம் செய்தார். க்வாசீங் ட்ஸாவென்றசீர்திருத்தவாதியின் தலைமையில் நடைபெற்ற கிளர்ச்சியும் அப்படிப்பட்ட சமத்துவத்தைத்தான் அவாவி நின்றது. 190·ம் வருடம் டோக்கியோ நகரிலிருந்து சீனமாதர்களின் உரிமைகட்காகப் போராடியோர் பத்திரிகைபிரசுரம் செய்யப்பட்டது. 1911ம் வருடம் நடைபெற்ற புரட்சியின் பின் பெண்கள் நாங்கிங் சர்க்காரிடம் ஒரு மனுவைக் கொடுத்து, தங்கட்கு சமவுரிமை வேண்டுமென்றும், கல்வி, மணம் செய்யும் அவகாசம் ஆகியவைகளில் சமவுரிமை வேண்டுமென்றும் வைப்பாட்டிகள் வைத்துக் கொள்ளும் தீயவழக்கத்தையும் அடிமை வியாபாரம் செய்யும் அகிரீனமான நடவடிக்கைகளையும் ஒழிக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்கள். ஆனால் அதுபோது சர்க்கார் அம்மனுவைக் கவனிக்கவில்லை. ஆகவே 1922ம் வருடம் பீக்கிங் மாணவிகள் சேர்ந்து பெண்கள் உரிமைப் போராட்டக் கழகம், பெண்கள் நலக்தேடும் சங்கம் என்கின்ற சபைகளை நிறுவி அவற்றின் கொள்கைகளை நாடு முற்றும் பரப்பத் தொடங்கினர்கள். இப் பெண்கள் சங்கம், கவர்ன்மெண்டில் சமத்துவ உரிமை, கல்வியில் சமத்துவ உரிமை, கல்யாணத்தில் சமத்துவ உரிமை, வாரிஸ்பாத்தியத்தில் சமத்துவ உரிமை உத்தியோகங்களில் சமத்துவமான சம்பளம்பெறுமுரிமை ஆகியவற்றை வேண்டிற்று. இந்தப் போராட்டம் ஆரம்பமாகு முன்பு 1921ல் ஹூனன் என்பவர் பெண்கட்கு சமசுதந்திரம் அளித்து பீக்கிங் பார்லிமெண்டுக்கு ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கவும் செய்தார்.

ஆனால் சமீபகாலங்களில் பெண்கள் ஸ்தாபனங்கள் சீனவில் அதீதமான வளர்ச்சியை யெய்தி இருக்கின்றன. அந்தஸ்தாபனங்களில் காண்டன் நகர்ஸ்தாபனமே முன்னணியில் நிற்கின்றது. 1927ம் வருடம் அந்நகரில் நடைபெற்ற ஒரு காட்சியில் இருபத்தையாயிரம் பெண்கள் கலந்து கொண்டார்கள். இந்தப் பெண்கள் இயக்கத்திற்கு தேசிய இயக்கம் மிகுந்த பக்கபலத்தைக் கொடுத்துதவியது. இதுவேதான் காண்டன் நகர் பெண்கள் விடுதலை போராட்டத்தில் முன்னணியில் வந்துநிற்கக் காரணம். அவர்கட்குத் தேசீய இயக்கம்செய்த ஊழியம் அபாரமாம். பெண்களும் தாராளமாக அவ்வியக்கத்தில் கலந்து தொண்டாற்றினர்கள். ஆகவே தேசிய இயக்கத்தின் மூலம் பல பெண்பாடசாலைகள் திறந்துவைக்கப்பட்டன. அவற்றில் பெண்மக்கள் அதிகமாக நுழைந்ததோடு சிலர் கல்விநாடி ருஷியாவுக்கும் செல்லலானர்கள்.

இத்தகைய சீனப்பெண்கள் முன்னேற்ற இயக்கத்திற்கு Y. W. C. A (யங் விமென்ஸ் கிருஸ்தியன் அசோசியேஷன்) சங்கம் கொடுத்த ஆதரவு மிக. இந்த இயக்கத்தின் பலனும் பிரதிபலனும் சில வுண்டு. பொதுவாக சீனமாதர்கள் சமூகநிலை உயர்ந்து வருகிறது; அவர்கள் குரலோசை கேட்கப் பட்டுவருகிறது; அவர்கள் ஆற்றல் பெருகிவருகிறது; அவர்கள் தேச ஊழியம் சிறந்து வருகிறது. அவர்களுடைய சுதந்திர எண்ணமும் நாளுக்குநாள் முதிர்ச்சியடைந்து வருகிறது.

(எவ்வளவு பெரியமாற்றம்! ஒருகாலத்தில் முகத்தை மூடி, திரையிட்டு, வீட்டினுட்புறத்தில், சமையற் கட்டில், அடுப்படியில் பதுங்கி ஒளித்து வைக்கப்பட்டிருந்த பெண்மணிகள் இன்று உலகைமயக்கும் மேலான விடுதலை பெற்றுதலைசிறந்து விளங்குகின்றார்களென்றால்—ஐயோ நம் இந்தியப் பழங் கிழங்கள் இன்னும் பெண் மகர்க்கு வாய்ப்பூட்டு கைப்பூட்டு கால்பூட்டுப் போட்டு அடக்குகின்றார்களே! இவர்களைப் பேதையரென்பதா? அல்லது இந்தியாவில் அறிவு ஜோதி பரப்ப நிற்கும் அருள்மணிகளை அறுத்தெறிகின்றனர் என்பதா? அல்லது தங்களையே தாழ்த்தியழித்துக் கொள்கின்றார்களென்பதா? ஏ! அறிவான பாரதமே! கண்விழித்துப்பார். சிறிது சிந்தி! சுற்று முற்றும் பார்த்து சிதானி! நாலாபக்கத்து நாடுகளையும் நோக்கு! உன் வடபால் பேரார்வாரத்துடன் விடுதலை ரஸ்தாவில் முனைந்து நிற்கும் ருஷியப் பெண்கள் குழாம் உலகம் திடுக்கிடுமாறு முன்னேறி வருகின்றார்கள். கீழ்திசையில் சீனமாதர் எய்திவரும் முன்னேற்றமும் கண்ணைப் பறிப்பதாயிருக்கின்றது. மேற்றிசையில் பெர்ஷியப் பெண்கள் அடையும் முன்னேற்றம் பொறுமைப்படத் தகுந்ததாம். இங்ஙனம் உன்னைசுற்றியுள்ள பல்வேறு தேசத்து மாதர்களும் அடிமைத்தனத்தைத் துவென்று தள்ளி வெளிப்படும் காலையில், நீ மட்டிலும் எவ்வாறு தப்பித்து நிற்க முடியும்? பழமையைப் பாப்ப முடியும்? அடிமையை வளர்க்க முடியும்? ஒருகால் நீ உன்முயற்சியில் வெற்றிபெற முயல்வாயெனில்—அது ஏலாது: திண்ணம், திண்ணம்—ஒருகால் முயன்றால் அர்நாடுகள் உன்னை எவ்வாறு மதிக்கும்? ஜப்பான் உன்னை அடக்கியாண்டிடலாமென்று கனவுகண்டால் அதில் யாது அதிசயமிருக்கின்றது? இப்படியாக உன்னை அடக்கிவைத்திருக்கின்றதென்றால் அதிலும் வியப்பில்லையன்றோ? நீ ஒருவரை அடிமைப்படுத்த நினைத்தால் வேறொருவரால் நீ அடிமைப்படுத்தப் படுவாயென்பதை உணராயேல் அது உன்மடமையே மடமையே! மடமையே!)

# பெர்சியாவின் நிதான முன்னேற்றம்.

## உருசியாவையே யொத்திருக்கின்றது.

## "குடியாட்சி வழங்க மனமில்லை" யென்று தலைவர் கூறுகிறார்.

வெளிப்பார்வைக்கு பெர்சியா தேசம் ஓர் அரசன்கீழ் இருப்பதாகத் தோற்றினாலும் உண்மையில் (புதிய) பெர்சிய ரிஜா ஷா பஹலவி என்ற சர்வாதிகாரியின் மேற்பார்வையிலேயே இருந்துவருகிறது. இந்த உண்மையை பட்டவர்த்தனமாக ஷாயூஜின் வியோன்ஸ் என்ற யுனைடெட் பிரஸ் நிருபருக்குக் கூறிவிட்டார். இன்று பற்பல சர்க்கார் ஸ்தாபனங்களும் ஷாவின் ஆணையிலேயே இருந்து வருகின்றன.

தேசிய மெட்ஜெல்ஸ் அல்லது பார்லிமெண்டின் தலைவராகிய மேன்மை தக்கிய டாக்டார், ஷாவின் வார்த்தைகட்கு எதிரிடையாக சொல்வதற்கு எந்தப் பார்லிமெண்டு அங்கத்தினர்களாலும் ஏலாது என்றும் 27 வருடங்கட்கு முன்பாக உரிமைகளைக் கோரிப் புரட்சி செய்த அங்கத்தினர்கள் ஷாவின் சொல்லையே கேட்டு நடக்கவேண்டுமென்றும் கூறினர்.

மேலும் டாக்டார் கூறியதாவது:--'எங்கள் ஜனங்கட்கு இன்னும் குடியாட்சியை வழங்க எங்கட்கு விருப்பமில்லை. அதோடு ஓர் எதிர் கட்சியை உண்டுபண்ணிக்கொள்ளவும் மனமில்லை. இப்போது சர்க்கார் செய்வதற்காக மேற்கொண்டிருக்கும் பணி, தேசத்திற்கு இன்றியமையாததும் மிக அவசியமானதுமாகும். ஆகையால் ஒரு மனிதனாவது மறுப்புக் கூறுவதற்கில்லை என்பது நிச்சயம்.

'ஒருவீடுகட்டியாகும்போது அதில் வர்ணம் வைப்பதைப்பற்றியும் அலங்காரம் செய்வதைப்பற்றியும் வாதம் நிகழலாம். ஆனால் அடிஸ்தானம் சட்டப்படுவதைப்பற்றி அபிப்பிராய பேதமிராதல்லவா? ஆம், நாங்கள் இப்போது அஸ்திவாரமே போட்டு வருகிறோம். வாதம்புரிய வேண்டிய காலம் இன்னும் நெருங்கவில்லை. ஆனால் நான் குடியாட்சியில் நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.'

இத்தகைய சம்பாஷணை மெட்ஜெல்ஸ் சபையின் அங்கத்தினர்களை வரவேற்கும் அறையில் நடைபெற்றது. அப்போது சுமார் ஆறு அரசியல் தலைவர்கள் பக்கத்தில் மௌனமாக உட்கார்ந்துகொண்டிருந்தனர். அவர்களோடு அர்மீனியின் தேசிய வாதிகளின் பிரதிநிதியாகிய மிர்ஜாரன்ட்ஸ் என்பவரும் ஒரு பத்திரிகை நிருபரும் உட்கார்ந்திருந்தார்கள். இப்பத்திரிகைப் பிரதிநிதி அமெரிக்காவில் சிகாகோ சர்வகலாசாலையில் பட்டம் பெற்றவராம்.

மெட்ஜெல்ஸ் தலைவர் உயரமானவரும் கம்பீரமான தோற்றமுடையவரும், அழகானவருமாவர். அவருடைய உடை, அணிந்திருந்த குல்லாய் முதலியவை நவீனநாகரிகமுடையவையா யிருந்தன. அதோடு அவர் புதிய பெர்சியாவின் வளர்ச்சியில் பேரார்வமுடையவர் என்பது விளங்கிற்று. ஆனால் பார்லிமெண்டை பொறுத்தவரையில் அவர் கொஞ்சம் மனவருத்தம் கொண்டேயிருந்தார்.

### உண்மை அதிகாரம்.

உண்மையில், அதிகார மென்பதில்லை. பார்லிமெண்டின் அங்கத்தினர் கைவிலங்கு பூட்டப்பட்டேயிருக்கிறார்கள். அவர்கள் ஷாவின் ஆணைப்படியே நடக்க வேண்டும். சர்க்கார் மந்திரிகளெல்லாம் யாதாஸ்துகளை பார்லிமெண்டிற்கே அனுப்புகிறார்கள். பார்லிமெண்டு கேட்கும் கேள்விகட்கும் பதில் சொல்லுகிறார்கள். மெம்பர்கள் பெரும்பான்மையும் ஷாவின் கருத்துப்படியான கேள்விகளையே கேட்கின்றார்கள். பார்லிமெண்டும் மந்திரிகளும் ஷா விடுக்கின்ற உத்தரவுகட்கு சீல் போடுபவைகளாகவே இருக்கின்றன.

பெர்சியா அரசர் சட்டசபைகளில் அதிகாரங்களைப் பிடுங்கிக் கொண்டிருப்பது ருஷியா, இத்தாலி முதலிய சர்வாதிகாரிகள் நாடுபோலவே இருக்கிறது. இவ்வாறு செய்யப்பெறுவதன்கருத்து ஜனங்கள் சுதந்திர உணர்ச்சி மிகுந்து அதிகாரங்களைக் கைப்பற்ற நினைக்கின்ற நிலைமையில் அவர்கட்கு உரிமை கொடுப்பதும் குடியாட்சியை வழங்கிவிடாம விருப்பதுமாகும்.

டாக்டார் மீண்டும் சொன்னதாவது:—ஒருநோயாளி இறக்கும்போது குடும்பத்தார் கூடிநின்று விவாதம் செய்யவும் கூட்டம் போடவும் செய்வதில்லையல்லவா? அப்போது செய்ய நினைப்பது ஒரு டாக்டரைத் தேடி எப்படியாவது மருந்து கொடுக்கும்படி முயல்வது அன்றோ? இதுதான் புதிய பெர்சியாவின் நிலைமை, முன்பு ஒரு நல்ல டாக்டர் இல்லாதிருந்தபோது வெறும் பேச்சினாலும் வாதத்தினாலும் மெட்ஜெல்ஸ் நிரம்பி இருந்தது. எதிர்ப்பதும் அதன் இயற்கையாயிருந்தது. ஆனால் இப்போது எங்கள் அரசர் வந்துவிட்டார். பெர்சியர் வேண்டுவது இரண்டு: அதாவது (1) ஒரு தலைவர் (2) பிறநாட்டு ஆட்சியிலிருந்து தப்புவது; இவ்விரண்டும் தற்போது எங்கட்கிருக்கிறது. எங்கள் ஷாவின் முதல்வேலை வெளிநாட்டாரின் ஆதிக்கத்தை ஒழிப்பதும் சொந்தமாக ஓர் ராணுவத்தை நிர்மிப்பதுமாம்.

### உருசியாவைப்போல்

யூஜின் வியோன்ஸ் ருஷியாவில்நல்ல அனுபவமும் பழக்கமுடையவரா கையால் பெர்ஷியாவிலுள்ள மக்களின் லட்சியம், மனோநிலை, கொள்கை யெல்லாம் ருஷிய லட்சியம் முதலியவற்றை ட்போன்றிருப்பதாய்க் காண்கின்றார். மாஸ்கோ தேசியவாதிகள் என்ன சொல்லுவார்களோ அதனையே பெர்சிய அரசியலில் ஈடுபட்டோர் கூறினார்களாம். அந்த அரசியல் வாதிகள் கூறியதாவது: நீங்கள் இதற்கு முன்பு பெர்சியாவைப் பார்த்திருந்தீர்களானால் நிச்சயமாகவும் இப்போது அடையாளம் கண்டுகொள்ள மாட்டீர்கள். நாங்கள் தொழிற்சாலைகள், ரோடுகள், ரயில் ரோடுகள் முதலியவற்றைக் கட்டிவருகிறோம். சிமண்டு செய்யும் ஆலையொன்று தயாராகிவருகிறது. தொனியாலை கட்டப்பட்டுவிட்டது. தொழிலபிவிருத்தியுள்ள மேனாட்டோடு ஒத்திருக்க வேண்டுமென்றால் ஒரு சர்வாதிகாரியின் கீழிலோ அன்றி வேறு வழியிலோ நாமும் தொழிலை அபிவிருத்திசெய்து கொள்ளவேண்டும். இந்த உணர்ச்சி ருஷியாவில் மட்டிலுமன்று, கீழ்நாடுகள் எல்லாவற்றிலும் தற்போது உதயமாகியுள்ளது.

இவ்வாறு திரு. யூஜின் வியோனும் டாக்டாரும் பேசிமுடிந்து இரண்டு மணி நேரமானதும் மெட்ஜில்ஸ் சபை கூடிற்று. டாக்டார் ஸ்தானத்தில் உட்கார்ந்தார். ஒரு அமெரிக்க துவிபாஷி பக்கத்திலிருந்தார். சுமார் 100 அங்கத்தினர்கள்—எல்லோரும் குல்லாயணிந்து பாதிவட்டமான பெஞ்சுகளில் உட்கார்ந்தார்கள். ஒரு முல்லா பாட்டுப்பாடுவது போல காரியதரிசி சென்ற கூட்டத்தின் குறிப்பைப் படித்தார். பக்கத்து காலரிகளில் 4 பெர்சிய யுவர்கள் மட்டிலுந்தான் விசிட்டர்களாக விருந்தார்கள். அயல் நாட்டு மந்திரி சில தஸ்தாவேஜுகளை தாக்கல் செய்தார். அவைகள் வாதமின்றி ஏற்றுக்கொள்ளப்பட்டன. பொக்கிஷ மந்திரி, வட பகுதியில் பொருட்களாகவே கிஸ்தி வசூல்செய்வதைப்பற்றிப்பேசினார். இதனை ஆட்சேபிக்கப் பலர் எழுந்தார்கள். ஆனால் மந்திரியின் பிரேரணை காஞ்சமும் பாதிக்கப்படவில்லை.

இதுதியில் பார்லிமெண்டு முடிவடைந்தது. எல்லோரும் வெளியே போனார்கள். இந்தப் பார்லிமெண்டுக்கும் பிறநாட்டுப் பார்லிமெண்டுகட்கும் வித்தியாசமேயில்லை.

## "காஸ்" அபிவிருத்தி.

பிரிட்டனில் "காஸ்" உற்பத்தி செய்யும் ஒரு கம்பெனி வருடமொன்றுக்கு சுமார் 1800 000 டன் நிலக்கரியை உபயோகித்து வருகிறது. இதற்காக சுரங்கங்களிலிருந்து நிலக்கரியெடுக்க சுமார் 70000 தொழிலாளர்கள் வேலைசெய்து வருகிறார்கள்.

### 8-க் கொடுத்து 30 பெற்றாள்.

ஜெர்மனியில் ஒரு பெண் சிறுபுடவையொன்றை ஏலத்தில் 8 ஷிலிங்கிற்கு வாங்கினாள். அதைவீட்டில் பிரித்துப்பார்த்தபோது அதனுள் 30 பௌன் நோட்டுகளிருக்கக்கண்டாள்.

0 0 0

இவ்வாண்டு 120 டன் மாம்பழங்கள் இந்தியாவிலிருந்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாயிருக்கின்றனவாம.

## ஜவுளி இறக்குமதி வரி உயர்வு

### மிஸ்டர் ராம்ஸே ஸ்காட் கூறும் விவரம்.

ஜவுளி இறக்குமதி வரி உயர்வைப்பற்றி மிஸ்டர் ஜே. ராம்ஸேஸ்காட் என்பவரை அஸோஸியேடட் பிரஸ் நிருபர் பேட்டிகண்டு பேசியபோது அவர் கூறியதாவது:--

நூற்றுக்கு 75 வீதம் பருத்தி ஜவுளி இறக்குமதி வரியை உயர்த்தியதால் பருத்தி ஆலைச்சொந்தக்காரர்கள் கவர்ன்மெண்டுக்கு மிக்க நன்றி செலுத்துவார்கள் ஆயினும் இந்த சவுகரியத்தை 6 மாதங்களுக்கு முன் செய்து கொடுத்திருக்கா மிக்க பலன் தந்திருக்கும் சென்ற ஆகஸ்ட் மாத முதல் சரக்கு கையிருப்பில் ஏராளமாகத் தங்கியிருக்கிறது, கூலியும் குறைந்திருக்கிறது. நிர்வாகத் திறமையில் குறைவு ஏற்படாமலிருக்கவும் பார்த்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. கூலி குறைவாகவிருக்கிறது. அங்கு அரிசி விலை 1932 பிப்ரவரியில் இருந்தது போலவே 1933 பிப்ரவரியிலும் இருக்கிறது. இந்த வரி உயர்வை ஜப்பான் சுலபமாகச் சமாளித்துவிடும். ஆகவே சீக்கிரத்தில் இந்திய நெசவுத்தொழில் இன்னும் அதிகமாகப் பாதுகாப்பு கோரவேண்டிவரும்.





## குதிரை கழுதையான விந்தை.

அயர் லாந்திலிருந்து குதிரையொன்றை குதிரைப் பந்தயத்திற்குப் பழக்கும் பொருட்டு இங்கிலாந்திலுள்ள காம்டன் நகருக்கு அனுப்பிவைத்தார்கள். அக்குதிரையை அனுப்பிய ரயில் வண்டி அங்குவந்து சேர்ந்ததும், அந்தவண்டியைத் திறந்து பார்த்தபோது குதிரையை காணோம். அங்கு குதிரைக்குப் பதிலாக ஒரு கழுதை இருக்கக்கண்டார்கள்.

### 1½ கோடி ராத்தல் தேயிலை.

1933-ம் வருடத்தில் இலங்கையிலிருந்து 164,26,110 ராத்தல் தேயிலையும், இங்கிலாந்திலிருந்து 1,71,73,343 ராத்தல் தேயிலையும் ஏற்றுமதியாயிருக்கின்றதாம்.

### வங்காளத்தில் கைதிகள்.

வங்காளத்தில் ஆள் தூக்கிச் சட்டப்படி சிறையில் 1500 வங்காளிகளுக்குமேல் காவலில் இருந்து வருகின்றார்களாம்.

### மனித் தீக்கோழி.

வால்டர் மார்ஷ் என்ற ஆஸ்டிரேலியர் கண்ணாடி ஊசி கடிகாரங்கள் முதலியவைகளைத்தின்பாராம். அவருக்கு 'மனிதத் தீக்கோழி" என்று பெயரிடப் பட்டிருந்ததாம. அவர் தம் 56-வது வயதில்சமீபத்தில் இறந்தாராம்.

### மனிதனுக்கு மூக்குச் சரடே.

பாரசீகத்தில் குடிகாரர்களுக்குத் தண்டனை என்னவெனில், மூக்கில் பித்தளை வளையமொன்றைமாட்டி, அதில் ஒரு கயிறுகட்டி, தெருத்தெருவாக இழுத்துக்கொண்டு ஊர்வலம் வரச்செய்வதாம்.

### பூனைகட்கு வரி.

ஜெக்கோஸ்லாவாகியாவிலுள்ள ஒருநகரில் பூனைகளுக்கும் கலியாணத்தில் பெண்கள் கொடுக்கும் ஸ்ரீதனத்திற்கும் வரிப்போட்டிருக்கிறார்கள்.

### ஸ்பெயின் கல்வி நிலை.

ஸ்பெய்ன் தேசத்தின் தலைநகரான மாட்ரிட் நகரில் மொத்தம் 1250000 பேர் வசித்து வருகிறார்கள். இவர்களில் 167802 பேர்களுக்கு எழுதப்படிக்கவே தெரியாது.

### அமெரிக்காவில் கொள்ளை அபிவிருத்தி

அமெரிக்காவில் சென்ற 7 வருடங்களாக கொள்ளைக் கூட்டத்தாரைக் கொன்றுநாசஞ்செய்து வருகிறார்கள். 12மணிக்கு ஒரு கொள்ளைக்கூட்டத்தார் விதம் சுட்டுக் கொன்று வருவதாக கணக்கெடுத்திருக்கிறார்கள்.

### ருஷிய ரசாயனம்.

மீன்களை நெடுங்காலம் உயிரோடு வைத்திருக்கக் கூடிய ஒரு முறையை ஒரு ருஷிய ரசாயன சாஸ்திரிகண்டு பிடித்திருக்கிறார்.

### சிறையில் இந்திரபோகம்.

இங்கிலாந்தில் சிறையில் வைத்திருக்கும் ஒரு குற்றவாளிக்கு வருடமொன்றுக்கு சராசரி 240 பௌன் செலவாகிறதென சிறை மேலதிகாரி கூறுகிறார்.

### தங்கப்பற்களின் தகைமை.

பிரிஸ்பேன் நகரில் ஒரு பல் வைத்தியனிடம் ஒருவர் தங்கப் பற்கள் கட்டிக்கொள்ளச் சென்றார். டாக்டர் அவருடைய பழைய தங்கப்பற்களைக் கழற்றிப் புதியதங்கப்பற்களைக்கட்டினார். பல் கட்டிக்கொண்டவர் தாம் டாக்டருக்கு எவ்வளவு கொடுக்க வேண்டுமெனக்கேட்டார். டாக்டர் பழைய தங்கப் பற்களிலிருந்து எடுத்த தங்கத்தைக் கணக்குப்பார்த்து தாமே அவருக்குக் கொடுக்கவேண்டியிருக்கிறதெனக்கூறி அவருக்கு 36 ஷிலிங் கொடுத்தனுப்பினர்.

## நோட்டீஸ்.

தேவகோட்டை டி. மு. கோர்ட்டு.
O. S. No. 129 of 1933.
I. A. No 319 of 1933.

| | | |
|---|---|---|
| தேவகோட்டை வள்ளியப்ப செட்டியார் ஊரணி ஷை தர்மத்தின் டிரஸ்டிகள் வ. க. மு. முத்தையா செட்டியார் | 1 | வாதிகள் |
| வ. பெரி, வ. நாக. சாமினாதன் செட்டியார் | 2 | |
| பழ. செகுநாதன் அம்பலம் வகையறு | | பிரதிவாதிகள் |

இந்த நிம்பர் வாதிகள் டிரஸ்டிகளுக்காக மேல்கண்டவர்கள் தங்களுக்காகவும் "வ" வகை குடும்பஸ்தர்களுக்காகவும் C. P. C. order 1 Rule 8 ன்படி Reperesentative முறைமையில் வியாஜ்யம் தொடர்ந்திருப்பதால் அதில் மறுமுள்ளவர்களுக்கு யேதாவது ஆக்ஷேபணையிருந்தால் தெரிவித்துக்கொள்ளுவதற்காக 19—6—1933 தேதி வாய்தா யேற்பட்டிருக்கிறது.

R அருணாசலம் அய்யர்,
வாதி அட்வகேட்.

## நோட்டீஸ்.

தேவகோட்டை சப்க்கோர்ட்டு.
1932ஷு E. P. நி 287.
ரெங்கூன் ஹைக்கோர்ட்டு.
1926ஷு C. R. நி 55.

| | | |
|---|---|---|
| J. C. Dutta | — | அசல்வாதி |
| மீனாஷி ஆச்சி | — | மேடோபர்வாதி |
| சுப்பய்யா செட்டியார் 1. | | 2, 3 பிரதிவாதிகள். |
| A. K. ராமசாமி செட்டியார் 2. | | |

ஷை நி அசல் வாதி J. C. Dutta பென்பவர் பிரதி வாதிகளின் பேரில் பெற்றிருக்கிற டிக்கிரியை நிறைவேற்ற மேடோபர் வாதி மனுப்போட்டு பிரதிவாதிகளுக்கு பாத்தியமான அடியில் கண்ட சொத்தை மே. வாதி ஜப்திசெய்து ஷைசொத்து 26-6-33ல் தேவகோட்டை சப்கோர்ட்டாரவர்கள் முன்பாக ஏலத்துக்கு வருவதில் ஷை சொத்தை யாரும் ஏலத்தில் கேட்கலாம்.

### சொத்து விபரம்.

காரைக்குடி சப்ரிஜிஸ்டருக்குச் சேர்ந்த கோட்டையூர் கிராமத்தில்:- கிழமேலோடிய வீதிக்குத் தெற்கு வீ. அ. க. அரு. அழ. மரக்கடை தோட்டத்திற்கும் கிழக்கு, வீ. வீர. ராம. வீட்டிற்கும் வடக்கு. அக. சு. தென் வடலோடிய வீதிக்கும் மேற்கு இந்த நான்கெல்கைக்குள்பட்ட வீட்டில் வீ. அக. நாராயணன் செட்டியாருடைய வடபாகம் பாதி நீக்கி 2, 3, பிரதிவாதிகளின் பாகம் தென்புறம் பாதி கிழமேல் தச்சு முழம் 60 தென் வடல் தச்சு முழம் 40 உள்ள யூனியன் 348, 349, 350 லக்கமுள்ளவீடு.

தேவகோட்டை 12—6—33. } G. Subbaratnam, மே. வாதி வக்கீல்.

[illegible] Company, Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

